# புதிய புத்தகங்கள்

**அல்லயன்ஸ் :**

சரத் சந்திரர் கதைகள் : ரூ. 1 8 0 சந்திரநாத் : சரத் சந்திரர் ரூ. 2 4 0 வஸந்தன் : எஸ். வி. வி. ரூ. 2 0 0 திரு. வி. க. சரித்திரம் : தை. ஆ. கனகசபாபதி.

**கல்கி :**

பார்த்திபன் கனவு : ரூ. 5 8 0.

**கலைமகள் :**

பச்சைக்கிளி : கி. சந்திரசேகரன் ரூ. 2 0 0 காளியின் தந்தை : து. ரா. ரூ. 2 0 0.

**சக்தி :**

ருஷ்யக் கதைகள் : சபரிராஜன் மொழிபெயர்ப்பு ரூ. 4 0 0 காந்தியும், விவேகானந்தரும் : வெ. சாமிநாத சர்மா ரூ. 1 8 0 காந்தியும், ஜவஹரும் ; வெ. சாமிநாத சர்மா ரூ. 0 8 0 சத்திய வேட்கை : ஆலிவ்ஷீனர் ரூ. 0 8 0 நிழல்கள் ; (நாடகம்) அ. சீனிவாசராகவன் ரூ. 1 8 0 புறநானூறும் தமிழரும் (சொற்பொழிவு) ரூ. 1 8 0.

**தமிழ்ப் பண்ணை :**

அச்சமில்லை : ராஜாஜி ரூ. 0 8 0 அமெரிக்காவைப் பார் : ரஹிம் ரூ. 0 8 0 நாடகமே உலகம் : 'நாடோடி' ரூ. 1 12 0

**நவயுகம் :**

காதலர் உள்ளம் : (நாவல்) ரூ. 1 12 0 எதிர்கால உலகம் : கு. ப. ரா. ரூ. 1 12 0.

**புதுமைப் பதிப்பகம்**

தமிழிசைப் பாட்டுக்கள் : ரூ. 4 8 0 மாணவருக்கு : காந்தியடிகள் ரூ. 7 8 0

**ஜோதி நிலயம் :**

பசி : க. நா. சுப்பிரமண்யம் ரூ. 1 12 0 அயர்லாந்து : மாரிசாமி ரூ. 1 12 0

(தபாற் செலவு தனி)

## சக்தி காரியாலயம்

261, சைனுபசார் சென்னை :: வடக்கு வெளி வீதி மதுரை

சுபானு
மலர் 9

# சக்தி

ஐப்பசி
இதழ் 2

Nov. 43.

**அன்பும் அறிவும் அறமும் திருவும் அருளும் ஆற்றலும்
இன்ப வாழ்வும் விளங்கச் சக்தி எழுந்து பொலிகவே!**

## வந்தவரும் போனவரும்

வேவல் வந்துவிட்டார்; லின்லித்கோ போய்விட்டார். வைஸிராய் பதவியில் ஆள் மாறுதல் ஏற்பட்டு விட்டது. ஆனால், இந்தியா மட்டில், இதுவரையில் இருந்தபடியே தான் இருக்கிறது. அதன் செல்வத் தலைவர்கள் சிறையை விட்டு இன்னும் வெளி வரவில்லை. இந்தியாவின் ஆத்மா இன்னும் சிறைக்குள்ளேதான் கிடக்கிறது. இந்திய அரசியல் வானில் இன்னும் மூச்சு முட்டும் புகைதான் சூழ்ந்து கிடக்கிறது.

லார்டு லின்லித்கோ, ஏழரை வருஷ காலம் வைஸிராய் பதவி வகித்தார். அவர் காலத்திலே, மாகாணச் சுய ஆட்சி ஏற்பட்டது; அவர் காலத்திலேயே அது மடிந்தும் விட்டது. இப்போது, ஏதோ சில மாகாணங்களில் உள்ள மந்திரி சர்க்கார்கள் வெறும் பொம்மை சர்க்கார்கள். அவைகளைக் கணக்கில் சேர்க்க முடியாது. சமஷ்டித் திட்டத்துக்கு, அவர் காலத்திலே குழி தோண்டப் பட்டது. யுத்தம் வந்தது. தேசியத் தலைவர்களுடன் அவர் செய்த பேரங்கள் பலிக்கவில்லை. பின்னால், கிரிப்ஸ் திட்டம் வந்தது. அதுவும் பலிக்கவில்லை. ஊருக்குப் போகையிலே, மீண்டும் ஒரு முறை, மாண்டு மண்ணிலே புதைந்த சமஷ்டித் திட்டத்தைப்பற்றி, முழங்கிவிட்டுப் போகிறார். அரசியலில் இப்படி. பொருள் நிலையிலோ பஞ்சம். வந்த போதைவிட, வருந்தத்தக்க நிலையிலே நாட்டைப் பார்த்துவிட்டு அவர் போகிறார். லின்லித்கோவை இந்தியா வெகு சீக்கிரம் மறந்துவிட முடியும். ஆனால், சுதந்தர லட்சியத்தை மறக்க முடியாது; ஒரு நாளும் மறக்காது.



வைஸிராய் வேவல்

வந்திருக்கும் வேவலுடைய வைஸிராய் பதவிதான் புதியது; அவர் இந்தியாவுக்குப் புதியவரல்ல. கிரிப்ஸ் திட்டத்தைப் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்தபோது, வேவல், இந்தியாவின் சேனாதிபதியாயிருந்தவர்தான். அப்போது, இவரும் கூட அந்தப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொண்டார். பேச்சுக்கு ஒரு கட்டத்தில் முட்டுக்கட்டை போட்டவரும் இவரே என்று ஒரு வதந்தியும் உண்டு. பிரிட்டனின் மிகச் சிறந்த ராணுவ

நிபுணர்களில் ஒருவரான வேவல், ஓர் இந்திய ராணுவ மந்திரிக்குக் கீழே எப்படி வேலை செய்யச் சம்மதித்திருக்க முடியும்? ஆனால், இப்போது அந்த நிலைமை இல்லை. மத்திய நிர்வாக சபையைப் பரிபூரணமாய் இந்திய மயமாய் மாற்றி விட்டாலும் கூட, அதற்கு மேலே வேவல் இருப்பார். தாராளக் கொள்கைகளைக் கொண்டவர் என்று ஏற்கனவே இந்தியாவில் பெயர் வாங்கிய ஆச்சின்லெக் மீண்டும் இந்திய சேனாதிபதியாய்ப் பதவியேற்றிருக்கிறார். இந்திய ராணுவத்தை ஜனநாயக ரீதியில் அமைக்க வேண்டுமென்ற கொள்கையை முன்னமேயே ஒப்புக் கொண்டவர் அவர். தவிர, கீழ்த்திசை யுத்த அரங்கம் பூராவுக்குமே லார்டு மவுண்ட்பாட்டன் தலைமைச் சேனாதிபதியாக வந்திருக்கிறார். இந்நிலையில் உண்மையான இந்தியத் தேசிய சர்க்கார் ஒன்றை அமைப்பதில் வேவலுக்கு ஆட்சேபம் இருக்கத் தேவையேயில்லை. அவருக்கு இணையற்றவொரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. இதை அவர் பயன்படுத்திக் கொள்வாரா?

ஏகாதிபத்தியப் பித்தம் பரிபூரணமாய் ஏறியவர் அமெரி. அவர் இந்தியா மந்திரியா யிருக்கிறார். 'அரை நிர்வாணப் பக்கிரி' என்று, மகாத்மா காந்தியை ஒரு காலத்தில் பரிகசித்தவர் சர்ச்சில். வட்டமேஜை மகாநாட்டில், "என் அருமை மகாத்மாவே!" என்று காந்திஜியை வாய் நிறைய ராம்ஸே மக்டானல்டு அழைத்தது கண்டு, "இதென்ன அநியாயம்! பார்லிமெண்டின் தஸ்தாவேஜி ஒன்றிலே, இந்த மகாத்மா பட்டம் ஏறுவதா!" என்று சீறியவர் சர்ச்சில். இப்போது அவர் பிரிட்டிஷ் பிரதம மந்திரியா யிருக்கிறார். காலமும் சரித்திரப் போக்கும் உலக நிகழ்ச்சிகளும் அவர்களை வெகுவாய் மாற்றியிருக்கும் அடையாளம் எதனையும் காணோம். இந்நிலையில், வேவலுக்கு மனமிருந்தாலும், அவர் என்னதான் செய்து விட முடியும்?

ஆயினும், வந்தவுடனே வேவல் ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறார். கல்கத்தாவிலே, ஆகஸ்டு 15உக்கும் அக்டோபர் 16உக்கும் நடுவிலே, 8,000 பேர் பட்டினியால் செத்திருக்கிறார்கள். தென் மேற்கு வங்காள நிலைமை கல்கத்தாவையும்விட மோசம் என்று அமெரியே கூறியிருக்கிறார். நாடு முழுவதையும் கதி கலங்கச் செய்திருக்கும் இந்த வங்காளப் பஞ்சக் கஷ்டத்துக்கு நிவாரணம் புரிய, ராணுவத்தின் உதவியை அளிக்க வேவல் தீர்மானித்திருக்கிறார். வங்கப் பிரச்னை மிக்க கடுமையானதுதான். அதற்குப் பரிகாரம் காண முயல்வது அத்தியாவசியமானதுதான். என்றாலும், அரசியல் பிரச்னையை மழுப்பவோ, மாற்றவோ அதனால் முடியாது என்பதை வேவல் மறவாதிருக்க வேண்டும். வந்தவுடனே பொலிகாளைச் செப்படு வித்தையில் மாஜி வைஸிராய் லார்டு லின்லித்கோ இறங்கியது போல, வேவல் இதைக் கைக்கொண்டிருக்க மாட்டார் என்றே நம்புகிறோம். அரசியல் பிரச்னை விஷயத்தில் உடனடியாக, வேவல் ஏதாவது செய்யப் போகிறாரா? அல்லது, இந்த வங்கப் பிரச்னை சம்பந்தமான முடிவோடு, அவருடைய மனச்சாட்சி உறங்கப் போய் விடுமா?

வங்கப் பஞ்சம் சம்பந்தமாக லார்டு வேவலின் முடிவைப் பாராட்டும், 'நியூ ஸ்டேட்ஸ்மென் அண்ட் நேஷன்' என்ற லண்டன் பத்திரிகை, "என்றாலும் இது போதாது" என்கிறது. காங்கிரஸின் ஒத்துழைப்பைப் பெற வேண்டும், காந்தியை விடுதலை செய்ய வேண்டும் என்பது அதன் அபிப்பிராயம். காந்திஜியை விடுதலை செய்தால், பஞ்சப் பிரச்னையைத் தீர்க்க அவராலான முயற்சியெல்லாம் செய்வது நிச்சயம் என்று அது கருதுகிறது. தேசத்தின் கடுமையான நெருக்கடிகளைத் தீர்ப்பதற்காகவேனும் தேசத் தலைவர்களின் ஒத்துழைப்பைப் பெற்றாக வேண்டும். வேவல் என்ன செய்கிறார் பார்க்கலாம்.



# காலச்சுழல்

**குண்டும் சங்கும் :** சில வாரங்களுக்கு முன் சென்னையிலே வெள்ளம் வந்தது. அது பல கோர லீலைகளைப் புரிந்து சென்றது. அதோடு, ஜப்பான் விமானம் வந்தபோது, அபாயச் சங்கையும் ஊதமுடியாமல் பழுதாக்கிவிட்டது. இதுவே நல்ல சமயமென்று, சென்னை சர்க்கார் ஒரு முடிவு செய்திருக்கிறார்கள். இனிமேல் விமானப் படையெடுப்பு வரும் போதெல்லாம், பிரத்யட்சமாய்க் குண்டுகள் வந்து விழும் வரையில் எப்போதும் சங்கூதுவது அனுபவ சாத்தியமில்லையாம். தவிர, அற்பமான படையெடுப்புகள் என்று தோன்றினாலும் சந்தேகித்தாலும், சர்க்கார் சங்கை ஊதமாட்டார்களாம். இந்த முடிவுக்கு என்ன காரணமாயிருக்கலாம் என்று நமக்குப் புரியவில்லை. தடுக்கி விழுந்த ஒருவன், 'பார்த்தாயா என் அந்தரை' என்று மார்பைத் தட்டிய கதையாக மட்டில் இது இராதென்று நினைக்கிறோம். சர்க்கார் தங்களுடைய முடிவைப் புனராலோசனை செய்து, தங்களால் முடிந்தமட்டும் சங்கூதுவார்கள் என்றே நாம் நம்புகிறோம்.

* *

**கொள்ளும் கடிவாளமும் :** 'கொள் என்றால், ஆ; கடிவாளமென்றால் உம்' என்ற குதிரையின் கதையாக இருக்கிறது சென்னை சர்க்காரின் சில நடவடிக்கைகள். காங்கிரஸ் மந்திரி சபை யிருந்தபோது, சேலம், வட ஆற்காடு, கடப்பை, சித்தூர் ஆகிய நான்கு ஜில்லாக்களிலும் மது விலக்குச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்தது. அதனால் ஏற்படக் கூடிய வருமான நஷ்டத்தை ஈடு செய்ய, விற்பனை வரியைப் போன்ற சில புதிய வரிகளையும் விதித்தது. அந்த வரிகளை மட்டில், இன்றைய சர்க்கார் விடவில்லை. சில வரிகளை உயர்த்தியு மிருக்கிறார்கள். ஆனால், திருட்டுச் சாராயம் காய்ச்சுவது போன்ற குற்றங்கள், மதுவிலக்குச் சட்டத்தால் அதிகரித்திருக்கின்றனவாம். ஆகையால், மதுவிலக்குச் சட்டத்தை ரத்துச் செய்ய, இந்திய சர்க்காரின் அனுமதியைச் சென்னை சர்க்கார் கோரப் போகிறார்களாம். இது விநோதமாயிருக்கிறது. திருட்டு மலிந்தால், திருட்டுக்குற்றம் பற்றிய சட்டத்தையே ரத்துச் செய்துவிடுவதுண்டா? அதுமாதிரிதானே இதுவும்? சட்டத்தை அல்லவா இன்னும் கடுமையாய் அமுல் செய்ய வேண்டும்?

* *

**மாஸ்கோ முடிவு :** மாஸ்கோவில், அமெரிக்கா, பிரிட்டன், ருஷியா மூன்று நாட்டு சர்க்கார்களின் பிரதிநிதிகளும் பேசிய பேச்சுகளின் பலனாக, ஒற்றுமையான முடிவுகள் ஏற்பட்டுள்ளனவாம். இதனால் யுத்தத்திலே சீக்கிரமாய்ப் புதிய மாறுதல்கள் நிகழக்கூடும். இதர பிரச்னைகள் ஒரு புற மிருக்க, நேரடியாய் யுத்தம் சம்பந்தப்பட்ட பிரச்னை ஒரே ஒன்றுதான். அதாவது, இதாலியப் போர் போதாது; பலமான இரண்டாவது போர்முனை ஒன்றை, பிரிட்டனும் அமெரிக்காவும் சிருஷ்டிக்க வேண்டும் என்பது ருஷியாவின் விருப்பம். ஜப்பானைத் தாக்க, சைபீரியாவில் ருஷியா தளம் கொடுத்தால்தான், இரண்டாவது போர் முனைக்குத் தாங்கள் இணங்கலாம் என்கிறார்கள் சில அமெரிக்கர். அப்படி ருஷியா செய்யுமானால், ஜப்பானைப் போருக் கிழுப்பதாகும். ஆகையால், இவ்விதம் ருஷியாவைக் கேட்பது நியாயமல்ல என்று ரூஸ்வெல்டே ஒப்புக்கொண்டிருக்கிறார். எவ்வாறாயினும், ஐரோப்பாவில் இரண்டாவது போர்முனை உடனே ஏற்படுவதை ருஷியா வற்புறுத்தாமல் விட்டிருக்காது. எனவே, பெரிய நிகழ்ச்சிகளை நாம் விரைவில் எதிர்பார்க்கலாம்.

* *

**சென்னைக்குப் பிச்சைக்காரர் விடுதி :** எங்கே பார்த்தாலும் கூனும், குருடும், செவிடும், பயங்கர வியாதியு

மாய்ப் பல பிச்சைக்காரர்கள் சென்னை நகரெங்கும் மக்களுக்குத் தொல்லை தருகிறார்கள். இவர்களின் தொல்லையை ஒழிக்க, ஒரு பிச்சைக்காரர் விடுதி அமைப்பது நீண்ட காலத் தேவையாகும். சென்னைக் கார்ப்பொரேஷன் இப்போது அத்தகைய ஒரு விடுதி அமைக்கத் தீர்மானித்திருப்பது நல்ல காரியம். கோட்டையூர் பாரிஸ்டர் அழகப்ப செட்டியார் இம்மாதிரி பற்பல அரிய காரியங்களுக்குப் பெருந் தொகைகளை நன்கொடை யளித்து வருவதால், அவருக்கு இவ்விஷயமாய்ச் சென்னைக் கார்ப்பொரேஷன் கமிஷனர் ஒரு வேண்டுகோள் செய்து கொண்டாராம். ஏற்றதொரு பெருந் தொகையை இதற்குத் தரும நிதியாய்க் கொடுப்பதற்கு அவரும் இசைந்துள்ளார் என்ற செய்தி மகிழ்ச்சிக்குரியது.

*   *

**உத்தமன் மரணம்:** மகாத்மா காந்தி, இரண்டாம் வட்ட மேஜை மகாநாட்டுக்குச் செல்லும் வழியில் பிரஞ்சு மண்ணில் காலடி வைத்தவுடனே, "விக்டர் ஹ்யூகோவையும் ரொமேன் ரோலந்தையும் பெற்றெடுத்த நாடல்லவா இது!" என்று சொல்லிப் புளகிதமடைந்தார். அந்த உத்தமன் ரொமேன் ரோலந்து காலமாகி விட்டார். இந்தச் செய்தி, உலக அறிஞர்க்கெல்லாம் துக்க மூட்டுவதாகும். ஜீன் கிரிஸ்டாபர் என்ற அற்புத நாவலுக்காக, நோபல் பரிசு பெற்றவர் ரோலந்து. அவருக்கு இந்தியாவின் சுதந்தரப் போராட்டத்தில் மிகுந்த அனுதாபம்; ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடத்தில் அளவற்ற பக்தி; மகாத்மா காந்தியிடம் உயர்ந்த மதிப்பு. பரமஹம்ஸரைப் பற்றியும், மகாத்மாவைப் பற்றியும் விரிவான புத்தகங்களும் அவர் எழுதியுள்ளார். அவர் காலமாகும்போது வயது 75. அவருடைய மரணத்தால், இந்தியா ஒரு பெரும் அனுதாபியை இழந்து விட்டது; காந்திஜி, உளம் பொருந்திய நண்பரொருவரை இழந்து விட்டார். வேற்றுமைகள் பல மலிந்த இந்தப் பாழும் உலகத்துக்கு உய்யும் வழி உண்டு என்ற நம்பிக்கை இம்மாதிரி உத்தமர்களால்தான் ஏற்படுகிறது. அவர்களது உடல் மறைந்தாலும், அவர்கள் எண்ணிய எண்ணங்களும் சாதித்த காரியங்களும் சிரஞ்சீவித் தன்மை பெறுகின்றன. ரோலந்தின் நாமம் நீடூழி வாழும்.

*   *

**இந்தியக் கோவேறு கழுதை:** யுத்த களத்திலே இந்தியக் கோவேறு கழுதைகள் மிக்க சாமர்த்தியமாய் நடந்து கொள்கின்றனவாம். அவைகளை ஓட்டுவோர் பெரும்பாலும் பிராம்மணர்கள் தானாம். பீரங்கிகளையும், குண்டுகளையும் இறக்குகிற வரையில், அசையாமல் சித்திரம் போல், அந்தக் கழுதைகள் நின்று கொண்டிருக்கின்றன. கடைசி மூட்டையை இறக்கியவுடனே, பாய்ந்தோடி யுத்த களத்துக்குப் பின்னே போய், அவை நின்று கொள்கின்றன. தாமாகவே, செடிகள் புதர்களில் போய் மறைவாய் இருந்து கொள்கின்றன. பீரங்கிகள் சுடும் போது, படுத்துக் கொண்டு, வெகு உன்னிப்பாய், போரைக் கவனிக்கின்றன. அவை மீண்டும் தேவை என்றவுடனே, அவைகளை ஓட்டுவோர் சமிக்ஞை செய்கிறார்கள். தட்சணமே அவை ஓடி வந்து, மூட்டைகளை ஏற்றிக் கொள்ளத் தயாராய் நிற்கின்றன! அவைகளின் குணாதிசயத்தை அறிய வெகு காலமாகிறது. பிராம்மணர்கள் அதில் மகா நிபுணர்களா யிருக்கிறார்கள் என்று லெப்டினன்ட் கர்னல் டி. ஏ. லோ என்பவர் புகழ்கிறார். மூட்டை சுமப்பதிலும் எவ்வளவு அபூர்வ மகிமை யிருக்கிறது, பார்த்தீர்களா!

*   *

**அமெரி போவாரா:** 'அமெரி போக வேண்டும்' என்று கொஞ்ச காலத்துக்கு முன், 'ஹிந்து' பத்திரிகை கர்ஜித்தது. இப்போது, அமெரி இந்தியா மந்திரி பதவியிலிருந்து மாறுவா ரென்று ஒரு லண்டன் செய்தி கூறுகிறது. அமெரி மாறினால் க்ஷேமந்தான். மாறுவாரா?



# கதம்பம்



**ஒரு ராணியின் துக்கம் :** உலக்கைக்குப் பயந்த ஒருவன் உரலிலே தலையை விட்டுக் கொண்டானும். அந்த மாதிரி கதையாகிவிட்டது பரோடா மகா ராணியின் நிலை. அந்த ராணி, "நாங்கள் ஸர் ஸி. பி. ராமசாமியைத் திவானுகப் பெற்றிருக்க வேண்டும். ஆனல், அவர் என் புருஷனை ஆட்டி வைத்து விடுவாரே என்று பயந்தேன். ஆகையால், அவர் வேண்டா மென்று சொல்லி, ஸர் வி. டி. கிருஷ்ணமாச்சாரியை நான் சிபார்சு செய்தேன். இவர், என்னையே ராஜ்யத்தை விட்டுத் துரத்திவிட்டாரே" என்று புலம்புகிருள் என்று 'போரம்' கூறுகிறது. ஐயோ, பாவம்!

*            *

**வேவல் கதை :** புதிய வைஸிராய் வேவல் வந்திருக்கிருரே, இவரைப் பற்றி ஒரு பழைய கதை உண்டு. இந்த யுத்தம் ஆரம்பிக்கு முன் ஒருநாள், தம் கீழிருந்த ராணுவ அதிகாரிகளையெல்லாம் கூட்டி வைத்துக்கொண்டு, தளபதி வேவல் ஒரு கேள்வி கேட்டாராம்: "வெளியூரிலுள்ள ஒரு பாங்கியை நீங்கள் கொள்ளை யடிக்க வேண்டும். எங்கே, அதற்கொரு பிளான் தயாரியுங்கள் பார்க்கலாம்" என்பது கேள்வி. அதிகாரிகளெல்லாம் திடுக்கிட்டு விட்டார்கள். வேவல் மீண்டும், "திகைக்காதீர்கள். நவீன காலப் போர்வீரன் எப்படிப்பட்டவனுயிருக்க வேண்டும், தெரியுமா? கொள்ளைக்காரன், கன்னக் கோல் கள்ளன், விஞ்ஞான சாஸ்திரி, மல்லன், சமய சஞ்சீவி இத்தனையுமாயிருக்கவேண்டும். ஆகையால், திட்டத்தைத் தயாரியுங்கள்" என்ருர். இவர்தான் இன்று நம் வைஸிராய்.

*            *

**அவசர வேலை :** சமீபத்தில் பெர்ணர்ட் ஷா, நியூயார்க் நகரில் உள்ள தியேட்டர் கில்டு என்ற நாடகச் சங்கத்துக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினர். அதன் முடிவிலே, "குட்டையான கடிதம் எழுத எனக்கு அவகாசமில்லாததால்தான், இந்த மிக நீண்ட கடிதத்தை எழுதிவிட்டேன். அதற்கு மன்னிக்கவும்" என்று குறிப்பிட்டிருந்தார். இது ஏதோ ஷாவுக்கு வழக்கமான குறும்பாக்கும் என்று யாரும் நினைக்க வேண்டியதில்லை. அவர் எதை யெழுதினுலும், எழுதி முடித்த பின் வெகு ஜாக்கிரதையாக அதைப் படித்து, அநாவசியச் சொற்களையும் வாக்கியங்களையும் எல்லாம் வெட்டித் தள்ளி, சுருக்கி, மறுபடியும் எழுதி விடுவது வழக்கம். அவ்விதம் சுருக்க இப்போது அவருக்கு நேரமில்லாததுதான், நீண்ட கடிதத்துக்குக் காரணம். தாங்கள் எழுதியதெல்லாம் தங்கமென்று நினைக்கும் ஆரம்ப எழுத்தாளர்கள், ஷாவைப் பார்த்தாவது திருந்துவார்களா?

*            *

**குருவுக்கும் பள்ளிக்கூடமா :** ஜே. கிருஷ்ணமூர்த்தியை மிகச் சிறு வயதிலேயே ஸ்ரீமதி அன்னிபெஸண்ட் சுவீகாரம் செய்து விட்டார் என்பது நண்பர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அவரை ஏசு பெருமானின் மறு அவதாரம் என்று பெஸண்ட் சொல்லி வந்தார். ஆக்ஸ்போர்டு நியூ காலேஜில் படிப்பதற்காக, கிருஷ்ணமூர்த்தியை, பெஸண்ட் அனுப்பினர். அங்கே டாக்டர் ஸ்பூனர் என்பவர் வார்டனுயிருந்தார். அவர் கிருஷ்ணமூர்த்தியின் விண்ணப்பம் வந்ததும், "கிருஷ்ணமூர்த்தியா? இவர் நம் ஆண்டவன் கிருஸ்து நாதருடைய புனர்ஜன்மம் என்று அறிகிறேன். ஆகையால், இவரை நமது காலேஜில் சேர்த்துக் கொள்ள முடியாது" என்று சொல்லி மறுத்துவிட்டார். உலகத்துக்கே போதனை செய்ய வந்த குருநாதருக்கு எந்த உபாத்தியாயர் போதிக்க முடியும்?

**வீரனின் யுக்தி :** ஓர் இத்தாலிய ராணுவ வீரன், சில முக்கியமான தஸ்தாவேஜிகளுடன், ஒரு ராணுவ ஸ்தலத்திலிருந்து மற்றொரு ராணுவ ஸ்தலத்துக்கு அனுப்பப்பட்டான். அவன் சற்று நேரத்துக்கெல்லாம், வெறுங் கையனாய், தன்னை அனுப்பிய அதிகாரியிடமே போய்ச் சேர்ந்தான்.

"அதற்குள்ளாகவா போய்வந்துவிட்டாய்?" என்றார் அதிகாரி.

"இல்லை. போனேனா? போகும் வழியிலே ஓர் ஆங்கிலப் போர்வீரன் மறித்துக்கொண்டான்; என் தஸ்தாவேஜிகளையெல்லாம் பிடுங்கிக்கொண்டான்" என்றான் வீரன்.

"அட முட்டாளே! உன் கையிலே ரிவால்வர் இருந்ததே. இல்லையா?" என்று ஆத்திரத்தோடு கேட்டார் அதிகாரி.

"ஓ! இருந்தது, எஜமான்! அதை விடுவேனா? அந்தப் பயலிடம் காட்டாமல் என் தொப்பிக்குள் அதை ஒளித்து வைத்துவிட்டேன்" என்றான் வீரன்!

* *

**அறிஞர் தந்திரம் :** எட்மண்ட் காஸ் என்பவர் சிறந்த அறிவாளி. பிரிட்டிஷ் லார்டு சபையின் லைப்ரேரியனாக இருந்தவர். பல ஆராய்ச்சி நூல்களும் எழுதியிருக்கிறார். டபிள்யூ. எம். ராஸெட்டி என்பவர் உயர்ந்த கலா ரசிகர். இருவரும் ஒரு சமயம் லண்டன் பஸ்ஸில் ஏறினார்கள். பஸ்ஸில் ஜனக் கூட்டம் தாங்கவில்லை. இரண்டு அறிஞர்களும் உரக்கப் பேசத் தொடங்கினார்கள்.

ராஸெட்டி : "நீங்கள் ஓர் அராஜகவாதி என்றல்லவா கேள்விப்பட்டேன்?"

காஸ் : "இல்லை. அது பொய். நான் ஒரு நாஸ்திகன் மட்டுமே யாவேன். என் மகள் இருக்கிறாளே, அவள்தான் அராஜகவாதி."

இந்தப் பேச்சைக் கேட்டவுடனே பஸ்ஸி லிருந்த பல கனதனவான்களுக்கு அருவருப்பு வந்து, கீழே இறங்கி விட்டார்கள். ராஸெட்டி, காஸ் இரண்டு அறிஞர்களும் தாராளமாய் உட்கார்ந்து, சௌக்கியமாய்ப் பிரயாணம் செய்தார்கள்.

* *

**புரளியால் வந்த வினை :** ஹங்கேரியில் யாரோ ஒரு புரளியைக் கிளப்பிவிட்டார்கள். ஓர் அணுவுக்குச் சமமான ஆயிரம் செப்புக்காசுகளை நேஷனல் பாங்கியில் கொண்டுபோய்க் கொடுத்தால், அந்த பாங்கிக்காரர்கள் ஒரு சைக்கிள் தருகிறார்கள் என்ற வதந்தி கிளம்பியது. அங்கங்கே எல்லாரும் செப்புக் காசுகளை வேட்டையாடத் தொடங்கினார்கள். சில்லறைப் பஞ்சம் ஏற்பட்டது. வியாபாரம் படுத்தது. உற்பத்தி வேலையும் குலைந்தது. மேலே கண்ட வதந்தியில் துளியும் உண்மை யில்லை என்று ஹங்கேரிய சர்க்கார் போன மாதம் ஒரு மறுப்பு வெளியிட்டார்கள். சைக்கிள் ஆசையால் செப்புக் காசுகள் குவித்த எண்ணற்ற ஜனங்கள் ஏமாந்து போனதுதான் மிச்சம். புரளிகளால், யாருக்கு லாபம்? எவருக்குமில்லை. ஆனால், எல்லாருக்கும் நஷ்டம் மட்டில் நிச்சயம்.

* *

**'ஹிட்லர்' அகப்பட்டார் :** இத்தாலியில் ஐந்தாவது சேனை, ஹிட்லரைப் பிடித்துவிட்டது. ஆனால், அவர் நிஜ ஹிட்லரல்ல. "நிஜ ஹிட்லரைப் பிடித்திருந்தால்தான் என்ன பிரயோசனம்? ஹிட்லரைப் பிடித்துக் கொண்டு வருவோருக்கு, பத்து லட்சம் டாலர்கள் இனாம் அளிப்பதாக, 1940-ஆம் வருஷம் ஒரு விளம்பரம் செய்தாரே, கார்னீஜி இன்ஸ்டிட்யூட்டின் அக்கிராசனரான ஹார்டன் சர்ச் என்ற பிரமுகர்; அவர்தான் இப்போது இறந்து போய் விட்டாராமே!" என்று கேட்கிறது ஒரு பத்திரிகை. அதனால்தான் ஹிட்லரை, படாக்ளியோவும் பிடிக்காமல் விட்டார் போலிருக்கிறது!



# ஆசிரியர் சொக்கலிங்கம்

ஏ. கே. செட்டியார்

அமெரிக்காவில், மாடு மேய்த்துக் கொண்டிருந்த இளைஞர் ஒருவர் பிற்காலத்தில் சிறந்த பத்திரிகை ஆசிரியரானுர் என்று கேள்விப்பட்டிருக்கிறேம். ஆனல், நமது நாட்டில், மளிகைக் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்த இளைஞர் ஒருவர், இன்று நம்மிடையே மிகச் சிறந்த பத்திரிகை ஆசிரியர்களுள் ஒருவராக விளங்குகிருர். அவர் தான் ஆசிரியர் சொக்கலிங்கம்.



நாற்பத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னே, சொக்கலிங்கம் தென்காசியில், பிரபலமும் செல்வாக்கும் நிறைந்த ஒரு குடும்பத்தில் பிறந்தார். அவருடைய தந்தை சங்கரலிங்கம் பிள்ளை சிறந்த மேதாவி. நியாயமான கட்சியில் சேர்ந்து உறுதியாகப் போராடியவர். அந்தக் காலத்தில், அவர் ஊரில் நடைபெற்ற சில சம்பவங்களின் காரணமாக, அரசாங்கத்தார் அவ்வூர் வாசிகளுக்கு, கூட்டு அபராதம் விதித்தார்கள். சங்கரலிங்கம் பிள்ளை இவ்விஷயமாக அரசாங்கத்தாரை எதிர்த்து ஓரளவு வெற்றியும் பெற்ருர். இவரது முயற்சியால் ஏழைகள் இந்தக் கஷ்டத்திலிருந்து தப்பினுர்கள். சொக்கலிங்கத்துக்கு மூன்று சகோதரர்களும் இரு சகோதரிகளும் உண்டு. பிரபலமான ஆஷ் துரை கொலை வழக்கில் தண்டனையடைந்த சிதம்பரம் பிள்ளை, சொக்கலிங்கத்தின் சகோதரர் ஆவார்.

சொக்கலிங்கத்தின் தந்தை, சுமார் ஐம்பது வருடங்களாகத் தென்காசியில் பெரிய பலசரக்கு மளிகை யொன்றை நடத்திவந்

---

*சில நாளைக்கு முன், சென்னை வெள்ளம், ஜப்பான் குண்டு இவைகளுக்கு முந்தி, இவைகளைப் போலவே பரப்பரப்பான ஒரு செய்தி தமிழ் நாட்டை ஒரு கலக்குக் கலக்கி விட்டது. அதுதான் திரு. டி. எஸ். சொக்கலிங்கம், தம் சகாக்களுக்காக, அவர்களோடு, '**தினமணி**'யை விட்டு விலகிய சம்பவம். அவரைப் பற்றிய வாலாறும் மிக்க வியப்பானதுதான்.*

தார். எனவே, சொக்கலிங்கத்துக்கு,சிறு வயதிலேயே மளிகைக் கடை அனுபவம் உண்டு. காகிதப் பஞ்சம் வருவதற்கு முன்னே, மளிகைக்கடைகளில், சாமான்களைக் காகிதத்தில் சுற்றிக்கொடுப்பார்கள். அந்தக் காலத்தில், மளிகைச் சாமான்களைச் சுற்றிக் கொடுப்பதற்குக் கூட அயல் நாடுகளிலிருந்து தான் பழைய சமாசாரப் பத்திரிகைகள் நமது நாட்டுக்கு, பேல் கணக்கில் வந்து கொண்டிருந்தன. இந்தப் பழைய பத்திரிகைகளை யெல்லாம் சொக்கலிங்கம் ஆர்வத்தோடு படிப்பதுண்டு. அந்தப் பத்திரிகைகளில் வெளிவந்த கார்ட்டூன் படங்கள் சொக்கலிங்கத்தின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. அந்தக் காலத்திலேயே அவர் 'லண்டன் டைம்ஸ்' வாரப் பத்திரிகைக்குச் சந்தாதாரராகச் சேர்ந்தார்.

1916-ஆம் வருடத்தில் சொக்கலிங்கம் முதன் முதலாகக் கட்டுரை எழுதினர். அந்தக் கட்டுரை 'ஆனந்த போதினி'யில் வெளியாயிற்று.'சுதேசமித்திரன்' 'தேசபக்தன்' 'தமிழ்நாடு' முதலிய பத்திரிகைகளுக்கும் கட்டுரைகள் எழுதினர். 1920-ஆம் வருடத்தில் நடைபெற்ற சத்தியாக்கிரகத்தின் போது, இயக்கத்தின் கொள்கைகளைப் பொதுமக்களிடம் பரப்ப வேண்டும் என்ற ஆர்வத்தினல், சொக்கலிங்கம் தென்காசியில் 'சுதேசமித்திரன்' பத்திரிகையின் விற்பனை ஏஜண்டாகக் கூட இருந்தார்!

சிறு வயது முதற்கொண்டே சொக்கலிங்கத்துக்குத் தேசிய விஷயங்களில் பற்றுதல் உண்டு. என்றலும், மகாத்மா காந்தியின் இயக்கம்தான் அவரை வர்த்தகத்திலிருந்து ராஜீயத்துக்குப் பூர்ணமாகத் திருப்பியது. அப்படிப் பூர்ணமாய்த் திரும்பு முன்பாக, பலசரக்கு மளிகை, இந்தியன் ஸ்டோர்ஸ்,ஸ்டார் கம்பெனி, ஜின்னிங் பாக்டரி ஆகிய அவருடைய குடும்பத்தைச் சேர்ந்த தொழில்களில் அவருக்கு அனுபவம் ஏற்பட்டது. தென்காசித் தாலூகாக் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியாக வேலை பார்த்தார். ராஜாஜி, திரு. வி. க., டாக்டர் நாயுடு, டாக்டர் ராஜன் போன்றவர்களை வரவழைத்துக் காங்கிரஸ் பிரசார வேலைகள் செய்தார். 1917-ஆம் வருடத்தில் ஆமதாபாத்திலுள்ள காந்தி ஆசிரமத்துக்குச் சென்றர். ஆனல், சொக்கலிங்கத்தின் தாயார், காந்திஜியிடம் சென்று, வாதாடி, அவருடைய அனுமதியின் மீது சொக்கலிங்கத்தை மீண்டும் அழைத்து வந்தார். அப்போது காந்திஜி சொக்கலிங்கத்தைப் பார்த்து, "தமிழ் நாட்டிலிருந்து வந்தவர்கள் இங்குள்ள சாப்பாடு பிடிக்காத காரணத்தால் இங்கே தங்குவ தில்லை. இப்பொழுது நீயும் போகிருய். நன்ருய் ஹிந்தி கற்றுக்கொண்ட பின்பு, சுற்றுப் பிரயாணத்தின் போது, உன்னை அழைத்துப்போக எண்ணியிருந்தேன்" என்று கூறினராம். சொக்கலிங்கம், காந்தி ஆசிரமத்மத்தில் இருந்தபோது, தேவதாஸ் காந்திக்குத் தமிழ் சொல்லிக் கொடுப்பதுண்டு.

1920-ஆம் வருடம் ஆரம்பித்த சத்தியாக்கிரக இயக்கம் சில காரணங்களினல் கொஞ்ச நாளில் நிறுத்தப்பட்டது. நிர்மாண வேலைகளில் ஈடுபடும்படி, காந்திஜி தொண்டர்களுக்குக் கட்டளையிட்டார். தேசத்தில் ஒரு சோர்வு ஏற்பட்டது. இந்த நிலையில்தான் சொக்கலிங்கம், பத்திரிகை உல

கத்தில் சேர்ந்து, நாட்டுக்குச் சேவை செய்ய வேண்டுமென்று எண்ணினர்.

அந்தக் காலத்தில், டாக்டர் வரதராஜுலு நாயுடுவை ஆசிரியராகக் கொண்டு, சேலத்திலிருந்து வெளி வந்த 'தமிழ் நாடு' வாரப் பத்திரிகை, மிகவும் செல்வாக்கான நிலைமையில் இருந்தது. அந்தப் பத்திரிகைக்கு இரண்டு உதவியாசிரியர்கள் தேவை என்று விளம்பரம் வந்தது. சொக்கலிங்கம் மனுச் செய்தார். அந்தச் சமயத்தில் திலகர் நிதி வசூலுக்காக, டாக்டர் நாயுடு தென்காசிக்கு வந்திருந்தார். காங்கிரஸ் துண்டுப் பிரசுரங்கள் எழுதுவதிலே சொக்கலிங்கத்துக்கு மிகவும் நல்ல பேர் உண்டு. இந்தத் துண்டுப் பிரசுரங்கள் சிலவற்றைப் படித்த டாக்டர் நாயுடு, சொக்கலிங்கத்தின் நடையைப் பாராட்டி, 'தமிழ் நாடு' பத்திரிகையில் உதவியாசிரியராய்ச் சேர்த்துக் கொண்டார்.

பாரதியாருக்கும் சொக்கலிங்கத்தின் சகோதரர் சிதம்பரம் பிள்ளைக்கும் நல்ல தொடர்புண்டு. ஒரு நாள் பாரதியார், அவர்கள் வீட்டுக்கு வந்திருந்த போது சொக்கலிங்கத்தைப் பார்த்து, "எனக்கு லட்ச ரூபாய் வேண்டும்" என்ருர். சொக்கலிங்கம் "எதற்காக?" என்று கேட்க, அதற்குப் பாரதியார், அமெரிக்காவிலிருந்து ஒரு சித்திரக்காரனை வரவழைத்து, தம்முடைய பாட்டுக்களுக்குச் சித்திரம் எழுத ஐம்பதினுயிரம் ரூபாயும், தம் நூல்களை அமெரிக்காவில் அச்சிட ஐம்பதினுயிரம் ரூபாயும் வேண்டுமென்ருர். இதன் காரணமாகத்தான், தமிழ் நாட்டில் முதன் முதலாக வெளிவந்த 'தமிழ் நாடு பொங்கல் மலரி'ல் பாரதியார் பாட்டுக்களைச் சித்திரங்களோடு சொக்கலிங்கம் வெளியிட்டார்.

பத்திரிகை உலகில் ஏற்பட்ட பல மாறுதல்களுக்குச் சொக்கலிங்கம் முக்கிய காரணமாவார். தமிழ்ப் பத்திரிகைகளில் அந்தக் காலத்தில் கார்ட்டூன் படங்கள் மிகச் சொற்பம். பாரதியார் நடத்திய 'இந்தியா' பத்திரிகையில் சில கார்ட்டூன்கள் வெளி வந்தன. அதன் பின்னர், 'தமிழ் நாடு' பத்திரிகையில் தொடர்ச்சியாய்க் கார்ட்டூன் வருவதற்கு, சொக்கலிங்கத்தின் முயற்சியே காரணமாகும். 1931-ஆம் வருஷம் காந்தி என்ற காலணுப் பத்திரிகையை, சொக்கலிங்கம் ஆரம்பித்தார். இந்தப் பத்திரிகை, நாற்பதாயிரம் பிரதிகளுக்கு மேல் செலவாயிற்று. காந்தியில் முதல் பக்கத்தில் எப்பொழுதும் ஒரு கார்ட்டூன் வெளிவரும். 'ரெவ்யூ ஆப் ரெவ்யூஸ்' எனும் சிறந்த ஆங்கிலப் பத்திரிகைக்காரர்கள், 'காந்தி'யில் வெளி வந்த சில கார்ட்டூன்களை எடுத்துத் தாங்களும் பிரசுரித்து, 'காந்தி' பத்திரிகைக்குத் தங்கள் பத்திரிகையை மாற்றுப் பத்திரிகையாகவும் அனுப்பினர்கள்.

சொக்கலிங்கத்தின் முயற்சியால் தான் 'தமிழ் நாடு' தினசரி முதன் முதல் அரையணுப் பத்திரிகையாக வெளி வந்தது. பிறகு தான், பல தினசரிகள் அரையணு விலையில் விற்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. எங்கும் ஏஜண்டுகள் ஏற்படுத்தி, அவர்கள் மூலமாகத் தனிப்பிரதிகள் விற்பனையாவதற்குச் சொக்கலிங்கம் பாடுபட்டு, அதில் வெற்றியும் பெற்ருர்.

சொக்கலிங்கத்துக்கு இருபது வருட காலமாகப் பத்திரி

கைத் தொழிலில் நல்ல அனுபவமுண்டு. லட்சக்கணக்கான மக்கள் இவருடைய தலையங்கங்களை வருஷக் கணக்காக ஆர்வத்தோடு படித்து வருகிறார்கள். சென்ற வருஷம், 'தினமணி' சிறிது காலம் நிறுத்தப் பட்ட பொழுது சொக்கலிங்கம் எழுதிய கடைசித் தலையங்கம், பத்திரிகைகளின் சரித்திரத்தில் இடம் பெறும். வழவழா என்ற சமாச்சாரம் இவருக்குப்பிடிக்காது. தாம் 'சரி' என்று உணருவதை எந்தக் காரணத்துக்காகவும் விட்டுக்கொடுக்க மாட்டார்.

சென்ற இருபது வருஷ காலமாக, பத்திரிகைத் துறையிலே நேர்மையாக நின்று, உறுதியான காங்கிரஸ் கொள்கையோடு பொது மக்களுக்குத் தொண்டு புரிந்து, பத்திரிகையின் சுதந்தரத்தையும் காப்பாற்றியவர் ஆசிரியர் சொக்கலிங்கம். சட்டசபைத் தேர்தலில் சொக்கலிங்கம், திருநெல்வேலி ஜில்லாவில் காங்கிரஸ் பிரதிநிதியாக நின்று வெற்றி பெற்றார். இவரை எதிர்த்து நின்றவர், ஏராளமாய்ச் செலவு செய்தும் வெற்றி பெறமுடியவில்லை.

இந்தியாவிலேயே, விரல்விட்டு எண்ணக்கூடிய மிகச் செல்வாக்கான பத்திரிகைகளில் 'தினமணி' யும் ஒன்று. இத்தகைய செல்வாக்கான நிலைமைக்குத் 'தினமணி' யைக் கொண்டு வந்தவர் ஆசிரியர் சொக்கலிங்கம். தேர்தல் காலத்திலும், அதற்குப் பின்னரும் 'தினமணி' செய்த தொண்டை, தமிழ்நாடு ஒரு நாளும் மறவாது. பொது மக்களின் அரசியல் எழுச்சிக்கு, 'தினமணி' முக்கிய காரணமாக இருந்தது. தமிழ் மக்கள் 'தினமணி' யைத் தங்கள் சொந்தக் குழந்தையைப் போல் போற்றி வளர்த்தார்கள். 'தினமணி' யே சொக்கலிங்கம், சொக்கலிங்கமே 'தினமணி' என்ற நிலைமை ஏற்பட்டது.

தென் னாட்டில் 'ஹிந்து'வுக்கு அடுத்த படியாக விளம்பர வருமானமுள்ள பத்திரிகை 'தினமணி' என்று கூறலாம். 'தினமணி'யை இந்த நிலைக்குக் கொண்டு வருவதற்கு முக்கிய காரணமாய் இருந்தவர் ஸ்ரீ எம். குஞ்சிதபாதம். தமிழ்நாடு பெருமையடையக் கூடிய சிறந்த பத்திரிகை நிர்வாகிகளிலே குஞ்சிதபாதம் ஒருவர். சில தினங்களுக்கு முன் ஆசிரியர் சொக்கலிங்கம், தம் உதவி யாசிரியர்களோடு 'தினமணி'யிலிருந்து கொள்கைக்காக ராஜிநாமாச் செய்ததை, தமிழ்நாடு நன்கறியும். ஆசிரியர் சொக்கலிங்கத்தின் ராஜிநாமாவுக்கு அனுதாபமாக, ஸ்ரீ குஞ்சிதபாதமும் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார். அவருடன் வேலை செய்த எட்டுப் பேர்களிலே எழுவர் ராஜிநாமாச் செய்துவிட்டார்கள்.

ஒரு காலத்தில் மிகச் செல்வாக்குடன் இருந்த 'தினமணி'க்கு, இதனால் மகத்தான நஷ்டம் ஏற்பட்டு விட்டது. ஆனால், தமிழ் நாட்டுக்கு நஷ்டமொன்றுமில்லை. புதிய பத்திரிகை மூலம் தொண்டு செய்ய வேண்டுமென்பது சொக்கலிங்கத்தின் ஆசை. சொக்கலிங்கத்தின் தலை யங்கங்களைப் படிக்க வேண்டு மென்பது தமிழ் மக்களின் ஆசை. எனவே, சொக்கலிங்கம் 'தினமணி' யிலிருந்து ராஜிநாமாச் செய்ததை, தமிழ் நாட்டின் அதிர்ஷ்டமென்று ஏன் கூறலாகாது?

★

# பர்மாவில் நடந்ததென்ன

எம். தீன் பே சொல்லும் விவரம்

பர்மாவை ஜப்பானியர் எப்படிப் பிடித்தார்கள்? தங்கள் சொந்த ராணுவ பலத்தினால் மாத்திரம் அல்ல; பர்மியப் புரட்சிக்காரர்களை ஏமாற்றித் தங்களுக்குச் சாதகமாய் வேலை செய்யச் செய்து, அந்த உதவியையும் பெற்றுக்கொண்டு விட்டார்கள். அதனாலேயே பர்மா எளிதிலே வீழ்ச்சியடைந்தது. பர்மாவின் இந்தப் பரிதாபக் கதை, இந்திய சர்க்காருக்கும், இந்திய மக்கள் அனைவருக்குமே, ஓர் எச்சரிக்கையாகும். 'பர்மாவில் நடந்ததென்ன?' என்ற தலைப்புடன் எம். தீன் பே என்ற பர்மியர் எழுதியுள்ள ஒரு புத்தகத்தில், அந்த நிகழ்ச்சி, விவரமாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஆசிரியர் எம். தீன், பே, 1935-ஆம் வருஷம் தொடங்கி 1939-ஆம் வருஷம் வரையில், பிரிட்டிஷாரை எதிர்த்துக் கிளர்ச்சி செய்த கோஷ்டியாரில் 'முதல் நம்பர்' என்று போலீஸ் ஜாபிதாவில் ஏறியிருந்தவர். பர்மிய அமிதவாத தேசியக் கட்சியின் கூட்டுக் காரியதரிசியாயிருந்தவர். (அந்தக் கட்சிதான், ஜப்பானியருடன் ரகசிய உடன்படிக்கை செய்து கொண்டது.) 1936-ஆம் வருஷம் அகில பர்மிய மாணவர் வேலை நிறுத்தத்தைக் கிளப்பி விட்டவரும் இந்த ஆசிரியரே. 1938-39-ஆம் ஆண்டில் தொழிலாளர் - குடியானவர்களால் நிகழ்ந்த பெருங்கிளர்ச்சியில் கலந்து சிறைப்பட்டவர். பர்மிய பாஷையில், சிறு கதைகள், சினிமாக் கதைகள், நாடகங்கள், பத்திரிகைக் கட்டுரைகள் முதலியவை எழுதிப் பிரபலம் பெற்றவர். இப்பேர்ப்பட்டவர், இப்போது ஜப்பானியரின் உளவர்களுக்குத் தப்பி இந்தியாவுக்கு வந்து சேர்ந்து இங்கே வாழ்ந்து வருகிறார். பர்மாவுக்கு ஜப்பானியர் செய்து வரும் துரோகத்தை விளக்கும் அவர், பிரிட்டிஷ் சர்க்காரின் தவறுகளையும் தாட்சண்யமின்றிக் கண்டிக்கிறார்.

பர்மாவிலே பிரிட்டனுக்கு விரோதமாய்க் கிளர்ச்சிசெய்த ஒருவர், இன்று தலைகீழாய் மாறிவிட்டார். காரணம் என்ன? ஜப்பானியரின் அட்டூழியங்களைக் கண்டு சகிக்காததுதான். பர்மாவில் நடந்த நிகழ்ச்சிகளை அவர் கூறுகையில், நாம் திடுக்கிட்டுவேண்டியிருக்கிறது. பர்மா நிகழ்ச்சிகள், பிரிட்டிஷ் சர்க்காருக்கும் இந்திய மக்களுக்குமே ஒரு படிப்பினையாகும்.

ஜெர்மனிக்கும் பிரிட்டனுக்கும் போர் தொடங்கிய உடனே, பர்மிய தேசிய வாதிகளுக்கும், ஜப்பானுக்கும் ரகசிய ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டு விட்டதென்று, இந்த மாஜி பர்மியப் புரட்சிக்காரர் கூறுகிறார். அந்த ஒப்பந்

தத்தின் சாராம்சம் இதுதான்: (1) ஜப்பானிய உதவியைப் பெறச் சம்மதமுள்ள பற்பல பர்மிய தேசீய கோஷ்டிகளும் 'தேசீயப் புரட்சிக் கட்சி' என்ற பெயருடன் ஒன்ருய் ஐக்கியமாக வேண்டும்; (2) அந்தக் கட்சி, 'பர்மிய சுதந்தர சேனை' என்ருெரு சேனையைத் திரட்ட வேண்டும்; அதற்கு ஒரு ஜப்பானியரே சேனுதிபதியாயிருப்பார்; (3) தேசீயப் புரட்சிக் கட்சி, ஜப்பான் படை யெடுக்கும் சமயம் பார்த்து, பர்மாவின் பல பாகங்களிலும் கலகங்களைக் கிளப்பிவிட வேண்டும்; அப்போது, அவர்களுக்கு ஜப்பானிய விமானங்களும் வந்து உதவி புரியும்; (4) பர்மிய சுதந்தர சேனைக்கும் கலகக்காரர்களுக்கும் தேவையான சகல ஆயுதங்களையும் தளவாடங்களையும் ஜப்பானியரே சப்ளை செய்வார்கள்; (5) பர்மாவின் சுதந்தரத்தை, ஜப்பானிய சர்க்கார் உடனே அங்கீகாரம் செய்ய வேண்டும்; (6) யுத்த காலத்தில், பர்மாவை ஜப்பானிய சேனை தற்காப்புச் செய்யும்; (7) தேசீயப் புரட்சிக் கட்சியின் சுப்ரீம் கவுன்ஸிலே, பர்மிய சர்க்காரை அமைக்கும்; (8) தான் செய்யும் உதவிகளுக்கெல்லாம் பிரதியாக, வியாபாரச் சலுகையையும் பர்மா-யுன்னுன் ரஸ்தாவைக் கண்காணிக்கும் உரிமையையுமே ஜப்பான் கேட்கும்.

இந்த ஒப்பந்த நிபந்தனைகளைக் கண்டு, பர்மிய தேசீய வாதிகள் வெகுளித்தனமாய் ஏமாந்து விட்டார்கள். காற்றடிக்கும் பக்கத்தில் சேரும் அபேதவாதியான டாக்டர் பாமா, தட்சணமே, இந்த பர்மியப் புரட்சிக் கட்சியில் சேர்ந்து விட்டார். பர்மாவின் புனருத்தாரணத்துக்கென்று 20 கோடி ரூபாய் ஜப்பானின் பட்ஜெட்டில் அனுமதிப்பதாக வேறு ஜப்பானியர் வாக்களித்தார்கள். இதே சமயத்தில், பர்மாவில் மற்றும் பல புதிய நண்பர்களைத் தேடவும், ஜப்பானிய ஏஜெண்டுகள் தூண்டில் வீசத் தலைப்பட்டார்கள். பாதுகாப்புக் கைதியா யிருந்த மாஜீ பிரதம மந்திரி ஊஸோ அப்படிப் பட்ட ஒருவர்.

பர்மிய வாலிப தேசபக்தர்களில் முப்பத்திரண்டு பேரை, கள்ளத்தனமாக, இந்தப் புரட்சிக் கட்சியார், பர்மாவை விட்டு வெளியே அனுப்பினுர்கள். அந்த முப்பத்திரண்டு பேரும், ஜப்பானிலும் பார்மோசாவிலும், ராணுவப் பயிற்சி பெற்ருர்கள். பர்மிய சுதந்தரப் படைகளை நடத்திச் செல்வதற்காகவே, அவர்களுக்கு இந்தப் பயிற்சி அளிக்கப்பட்டதாம். பர்மாவை ஜப்பான் படையெடுக்க இரண்டு வருஷங்களுக்கு முன் முதலே, இந்தச் சதிகளனைத்தும் நடக்கத் தொடங்கி விட்டன.

ஆனுல், பர்மாவுக்கு, ஜப்பான் செய்த வாக்குத்தத்தங்களை யெல்லாம் எப்படி நிறைவேற்றியது? பாஸிஸ வெறியர்களைப் போலவே தான், ஜப்பானும் நடந்து கொண்டது. பர்மியப் புரட்சிக்காரர்களுக்கு ஜப்பான் அனுப்புவதாய்ச் சொன்ன ஆயுதங்கள், பர்மாவுக்கு வந்து சேரவேயில்லை. மூங்கில் தடி, ஈட்டி, பிச்சுவா இவைகளை வைத்துக் கொண்டு பர்மியர் கலகஞ் செய்யட்டும் என்று ஜப்பானிலிருந்து கட்டளை பிறந்தது. பர்மிய சுதந்தர சேனைக்கு ஆயிரம் ரைபிள்களும் நூறு பிஸ்டல்களும் தவிர, வேறு எந்த ஆயுதமும் ஜப்பானியர் தரவில்லை. கலகம் செய்து

கைப்பற்றிய ஆயுதங்களையும் தளவாடங்களையுமே, பர்மியப் புரட்சிக்காரர்கள் தங்களுக்கு வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. பர்மாவுக்குத் தருவதாய்ச் சொன்ன இருபது கோடி ரூபாயில் ஆயிரத்திலொரு பங்குகூட, ஜப்பான் அளிக்கவில்லை. ஆனால், பர்மிய சுதந்தர சேனை மட்டில், ஒப்பந்த ஷரத்துப்படி, ஜப்பானிய சேனைத் தலைவரின் கீழ் வேலை செய்ய வேண்டியதாயிற்று. கர்னல் மினமி என்று அந்தச் சேனைத் தலைவருக்குப் பெயர்.

பர்மிய சுதந்தர சேனை, முதன் முதலில் தாய்லாந்தில்தான் அமைக்கப்பட்டது. இந்தச் சேனையிடமே பின்னால் ஜப்பானியர் மிக்க ஜாக்கிரதையாக நடந்து கொள்ளத் தொடங்கினார்கள். மோல்மேனில், பர்மிய சுதந்தர சேனைக்கும் ஜப்பானியருக்கும் சில்லரைத் தகராறுகள் ஏற்பட்டு, பின்பு ஒருவிதமாய்ச் சமரசம் நடந்தது. அதன் பின், போரில் முந்தி ஜயிக்க வேண்டுமென்பதற்காக, ஜப்பானியருக்கும் பர்மிய சேனைக்கும் கடுமையான போட்டா போட்டி ஆரம்பித்துவிட்டது. முதலில் பர்மிய சேனையில் அதிகமான பேர் இல்லை. ஆனால், பிரிட்டிஷார் தோல்வியுற்றதும், பர்மிய சேனை மிக வேகமாய் வளரலாயிற்று. அக்யாபுக்கு ஒரு பர்மியப் படையும் புறப்பட்டது; ஜப்பானியப் படையும் புறப்பட்டது. பர்மியப் படை ஒருநாள் முந்தியே சென்று, பல தளவாடங்களையும் 24 லட்ச ரூபாய் பணத்தையும் கைப்பற்றியது. இந்தப் பணம் யாரைச் சேர்ந்தது என்பதில் இரு படைகளுக்கும் சச்சரவு உண்டாயிற்று. கடைசியில் பர்மியப் படையே பணியவேண்டியதாயிற்றும்!

ஜப்பானியரிடம் டிரக்குகளும் மோட்டார் போட்டுகளும் இருந்ததால், புரோமிலும் பின்மானாவிலும் அவர்கள் முந்திவிட்டார்கள். அதற்கப்புறம், பர்மியப் படையைப் பின்னே விட்டுவிட்டு, நாடெங்கும் வேகமாக ஜப்பானியர் முன்னேறிவிட்டார்கள். பர்மாவின் வடகோடிகளுக்கெல்லாம், பர்மியப் படை நடந்தே செல்ல வேண்டியதாயிற்று. 'நடப்பதுதான் சிறந்த ராணுவக் கல்வி' என்று, பர்மியப் படையினருக்கு ஜப்பானியர் உபதேசமும் செய்தார்களாம். ஜனங்களுக்கெல்லாம், பர்மிய சுதந்தரப் படையினரிடம் நல்ல மதிப்பு. கலியாண மார்க்கட்டில், ஏற்கனவே ஐ. ஸி. எஸ். அதிகாரிகளுக்கு எவ்வளவு மதிப்போ அவ்வளவு மதிப்பாம் இப்போது பர்மிய சுதந்தரப் படையினருக்கு!

எனினும், ஜப்பானிய சேனை, பர்மா பூராவிலும் சூழ்ந்துகொண்டுவிட்டது. அதன் அதிகாரிகளும் சாதாரண வீரர்களும், செய்யும் அக்கிரமங்களுக்கு அளவில்லை. ஜப்பானிய வீரருக்குத் தேங்காய் வேண்டுமென்றால், தென்னை மரத்தையே வெட்டிச் சாய்த்து விடுகிறார்கள்! எந்த வீட்டிலும், தங்களுடைய பரம்பரையான வீடு போல ஜப்பானியர் நுழைந்து, வீட்டுக்காரரின் சம்மதத்தைக் கேளாமலே, உப்பு, மீன், வேறு எது வேண்டுமோ அது எல்லாவற்றையும் அள்ளிக்கொண்டு போய் விடுகிறார்கள்! கடைகளுக்குள்ளே புகுந்து, காசு கொடாமலே, இஷ்டப்பட்ட பண்டங்களைத் தூக்கிக் கொண்டு போய்

விடுகிறார்கள்! பொங்கிகளை, விறகுக்கு மரம் வெட்டச் சொல்லுகிறார்கள்! ரங்கூன் சர்வகலா சாலையில் மாணவர் வாசகசாலையின் தரை மரத்தினால் தளம் செய்யப்பட்டிருக்கிறது. அந்த இடத்திலே ஜப்பானியர் அடுப்பு மூட்டிச் சமையல் செய்துவிட்டார்கள்; விறகுக்கு அங்கிருந்த புத்தகங்களையே உபயோகித்துவிட்டார்களாம்! சில ஜப்பானிய வீரர்கள் ஒரு கிராமத்திலே துணி வாங்கினார்கள். இரண்டு ரூபாய் குறைந்தது. உடனே யாருடையதோ ஒரு குதிரையைத் திருடி அதை வேறு யாருக்கோ இரண்டு ரூபாய்க்கு விற்றுவிட்டுப் போய்விட்டார்களாம்!

கியாக்ஸேயில் ஒரு ஜப்பானியன், ஒரு கிராமத்தில் ஒரு மாட்டு வண்டியை அபகரித்தான்; இன்னொரு கிராமத்தில் சில கோழி முட்டைகளுக்கு அதை விற்று விட்டான்! ஏதோ பாலங் கட்டுவதற்காக, ஒரு பர்மியனின் வீட்டுத் தூண்களையெல்லாம், சில ஜப்பானியர் பிடுங்கிக் கொண்டு போய்விட்டார்கள்; வீடு அதோ கதியாயிற்று. எந்த வீட்டிலும் பலவந்தமாய் நுழைந்து, அவர்கள் தங்குவார்கள்; எருக்கமா யிருக்கிற தென்றால், காற்றுக்காக, சுவரை இடித்துத் தள்ளி விடுவார்கள்! பர்மியப் பெண்கள் பலரை அவர்கள் பலத்காரமாய்க் கற்பழித்திருக்கிறார்கள். ஓரிடத்தில் பதினைந்து வயதுப் பெண்ணொருத்தியை, அவளுடைய பெற்றோர் அறிய, ஒரு ஜப்பானியன் கற்பழித்தானாம். அந்தத் திக்கற்ற பெற்றோர் ஆட்சேபிக்கவே, சில ஜப்பானிய சோல்ஜர்கள், தங்கள் துப்பாக்கிச் சனியன்களை நீட்டி மிரட்டி அவர்களை அடக்கிவிட்டார்களாம்.

பர்மிய சுதந்தரத்தை உடனே அங்கீகரிப்பதாக, ஜப்பானியர் வாக்களித்தார்களே; அது என்ன ஆயிற்று? "சுதந்தரம் இப்போது சாத்தியமில்லை; யுத்தம் முடிந்த பிறகு பார்க்கலாம்" என்கிறார்களாம்! பர்மாவில் 'புதிய சர்க்கார்' ஏற்படுத்தியிருக்கிறார்களே, அது, ஜப்பானிய ராணுவ நிர்வாகிகளோடு ஒத்துழைக்க வேண்டும்; ஜப்பானிய சேனாதிபதிக்கே முடிவான அதிகார மிருக்கும்; இந்த பர்மிய சர்க்காரின் பட்ஜெட்டும் பிற முக்கியப் பிரச்னைகளும் ஜப்பானிய ராணுவ நிர்வாகிகளாலேயே கவனிக்கப்படும்; ஜப்பானின் யுத்தத்தை, தங்கள் யுத்தமாகவே பர்மியர் பாவிக்க வேண்டும்!

இந்தக் கொடுமைகளையெல்லாம் கண்டு, பர்மியருக்கு முதலில் ஒரே திகைப்பா யிருந்தது; பிறகு அவர்கள் மனஞ்சோர்ந்து போனார்கள். படாடோபங்களை விரும்பும் பர்மியர்களுக்கு மட்டில், ஜப்பானியரிடம் அன்பு வந்திருக்கிறது. தாகின் துன் ஓ என்பவர் அரசியலில் ஒரு விதூஷகனைப் போன்றவர்; பார்வைக்கு ஒரு சினிமா நடிகனைப் போலிருப்பார். இவர் எப்போதும் ஜப்பானியப் போலீஸ் படையொன்று பின் தொடர, காட்சியளிக்கிறார். டாக்டர் பா-மா, பர்மாவின் சர்வாதிகாரி போல, ஆடம்பர விருதுகளெல்லாம் அளிக்கப்பட்டிருக்கிறார். பாஸிஸ பயங்கர முறைகள் அனுஷ்டிக்கப்படுவதால், பற்பல பத்திராசிரியர்களும் நடுநடுங்குகிறார்கள். பிரிட்டிஷ் காலத்து உத்தியோகஸ்தர்கள், எவ்வளவு 'சமய சஞ்சீவிகள்' என்பதற்கு, சகேங்கில் நடந்திருக்கும் ஒரு நிகழ்ச்சியை உதாரணமாகக் கூறலாம். யுத்த நாசங்

களுக்குப் பயந்து, சகேங் மலைக் குன்றுகளில் சில மார்ஜி மந்திரிகளும், ஜில்லாக் கலெக்டர்களும், ஜில்லாப் போலீஸ் சூப்பரிண்டண்டுகளும், மற்றும் பல மாஜி உத்தியோகஸ்தரும் ஒளிந்து கொண்டிருந்தார்கள். அவர்களெல்லோரும் இப்போது 'உதய சூரிய'னை (ஜப்பானை) தொழ வந்துவிட்டார்கள்; ஜப்பானிய ரிடம் உத்தியோகங்கள் பெற்று விட்டார்கள்

பர்மிய சுதந்தர சேனையைச் சேர்ந்தவர்கள், தாங்கள் முன்னதாய்ப் பிடித்த பல இடங்களில், நிர்வாகக் கமிட்டிகளை நியமித்தார்கள். அந்தக் கமிட்டிகளின் அதிகாரங்களையெல்லாம், ஜப்பானியர் பறிமுதல் செய்து விடுகிறார்கள். பர்மியக் கமிட்டியார் வசூலிக்கும் வரிகளுக்கெல்லாம், ஜப்பானியப் போலீசுக்குக் கணக்கு அனுப்ப வேண்டும் என்று ஜப்பானியர் உத்திரவிட்டார்கள். அந்தக் கமிட்டியார் ஒரு யுக்திசெய்தார்கள். வரிகள் என்று வசூலிக்காமல், நன்கொடைகளாக வசூலிக்கத் தொடங்கி விட்டார்கள்!

இதெல்லாம் ஒருபுற மிருக்க, பர்மாவின் பொருளாதார நிலைமையும் மகா மோசமாகி விட்டது. பர்மாவில் எற்கனவே வழங்கி வந்த பிரிட்டிஷ் நாணயம் புழங்குவதை, ஜப்பானியர் தடுக்கவில்லை. ஆனால், அதோடு 1, 5, 10 ரூபாய்களுக்கும் $\frac{1}{4}$, $\frac{1}{2}$, 1, 4 அணைக்களுக்கும்கூட ஜப்பானிய சர்க்கார் கரன்ஸி நோட்டுகள் அச்சிட்டு வழங்கி வருகிறார்கள். நவீனப் போக்குவரத்துச் சாதனங்களெல்லாம் பர்மாவில் அநேகமாய் ஒழிந்துவிட்டன. ரயில்கள், கப்பல்கள் கிடையாது. ஜப்பானியரைத் தவிர வேறு யாரும் மோட்டாரில் போகக்கூடாது. மிகச் சில பஸ்கள் அத்தி பூத்தது போல் ஓரிரண்டு இடங்களில் ஓடுகின்றன. அவற்றின் கட்டணமோ முன்னைவிடப் பத்து மடங்கு உயர்ந்திருக்கிறது. கிராமவாசிகள் திருட்டுத் தனமாய் எண்ணெய்க் குழாயை வெட்டி எடுத்துச் சுத்தி செய்த பெட்ரோலை, காலன் ஒன்றுக்கு 12 ரூபாய் வீதம் விற்கிறார்கள். இதுதான் பஸ்களுக்குக் கிடைக்கும் பெட்ரோல்!

இன்னும் தபால் இலாக்கா ஏற்படவில்லை: தந்தியையும் டெலிபோனையும் ராணுவம் மட்டிலுமே உபயோகிக்கிறது. வெளி ஜில்லாக்களில் மித மிஞ்சிய அரிசி கிடக்கிறது. என்றாலும், போக்குவரத்துச் சாதனங்கள் சீரழிந்திருப்பதால், 1942-ஆம் வருஷம் ஜூன் மாதத்தில் ரங்கூனில் ஒரு மூட்டை அரிசி 40 ரூபாய் வரை விலை ஏறி விட்டது. அதே ஒரு மூட்டை அரிசி 1941-ஆம் வருஷம் டிசம்பரில் 16 அல்லது 18 ரூபாய்க்குத்தான் விற்றது. சகல இறக்குமதிச் சாமான்களும் காலியாகி வருகின்றன. எற்கனவே வந்த ஜப்பான் சாமான்கள்கூட இப்போது வரக்காணோம். 'ஸன்லைட்' போன்ற ஒரு கட்டி சோப் ஒரு ரூபாய்; ஒரு தீப்பெட்டி $4\frac{1}{2}$ அணா; ஓர் ஊசி 2 ரூபாய்; ஒரு பஞ்சு நூல் லுங்கி 6 ரூபாய்; ஒரு வீசை மண்ணெண்ணெய் 2 ரூபாய். இப்படியே எல்லா விலைகளும் ஏறி யிருக்கின்றன. ஜனங்கள் பழம் பசலிக்குத் திரும்பி விட்டார்கள். நாட்டுப் படகுகளிலும், மாட்டு வண்டிகளிலும் பிரயாணம் செய்கிறார்கள். சிக்கி முக்கிக் கல்லால் நெருப்புத் தயாரிக்கிறார்கள். மண்ணெண்ணெய்க்குப் பதிலாக, தாவர எண்ணெய்களை உபயோ

கிக்கிறார்கள். வெகு காலமாய் மறந்திருந்த சர்க்காவையும் பர்மியர்கள் சுற்றத் தொடங்கிவிட்டார்கள்!

இந்த விவரங்களை யெல்லாம் விரிவாக எடுத்துச் சொல்லும் எம். நீன் பே, பிரிட்டிஷ் அதிகாரிகளும் இந்தியாவின் பல கட்சியாரும் இதனால் பின்வரும் படிப்பினைகளைப் பெறவேண்டுமென்கிறார்: (1) தனக்குப் பின்னே அதிருப்தியுள்ள மக்களை வைத்துக்கொண்டு, பாஸிஸத்தோடு ஒரு நாடு யுத்தம் தொடுப்பது ஆபாய மென்பதை அமெரி அறியவேண்டும்; வருங் காலத்திலே சுதந்தர மளிப்பதாகச் சொல்வது, அடுத்த ஜன்மத்தில் பரமானந்தம் கிட்டுமென்று சொல்லும் மதபோதனை போன்றதே யாகும்; அத்தகைய பகட்டு வார்த்தைகளால், மக்களை உன்னதமான செயல்களுக்குத் தூண்ட முடியாது; (2) பாஸிஸ மிருகங்களின் மூர்க்கத்தனத்தையும் குரூரத்தையும் குறைத்து மதிக்கலாகாது என்று காந்திஜி அறியவேண்டும்; (3) பர்மிய தேசீய வாதிகளின் கதியைக் கண்டு, இந்திய தேசீய வாதிகளெல்லாம் பாடம் கற்கவேண்டும்; சர்வ தேச சுதந்தரப் போராட்டத்தை மறந்து தேசீய வாதத்தை மிக மூர்த்தன்யமாய்ப் பின்பற்றினால், முன்னிலும் கேடான அடிமைத் தனமும் அபாயமுமே நேரிடும்; (4) சர்வ தேசக் காலித்தனம், ராணுவ வெற்றி, கொள்ளை இவையே பாஸிஸத்தின் நோக்கம் என்பதை இந்திய முதலாளிகள் தெரிந்து கொள்ள கொண்டும்; உங்கள் வசதிகளை, பாஸிஸ்டுகள் பெருக்க மாட்டார்கள்; உங்களிடம் உள்ளதை யெல்லாம்தான் கொள்ளையடித்து, தங்கள் நாட்டுக்குக் கொண்டுபோய் விடுவார்கள்; (5) முதலாளித்துவச் சுரண்டலே ஜப்பான், ஜெர்மனி இரண்டின் புதிய வாழ்க்கைத் திட்டமுமாகும்; எனவே, அதிகக் கூலியோ உயர்ந்த விலையோ அவைகள் கொடுக்கமாட்டா என்பதை ஒவ்வொரு தொழிலாளியும், ஒவ்வொரு விவசாயியும் அறிந்துகொள்ள வேண்டும்,

"ஆகையால், நாணயமான ஒவ்வோர் இந்தியனும், இந்தப் பாஸிஸ எதிர்ப்பு யுத்தத்தை, தன் சொந்த யுத்தமாகவே பாவிக்க வேண்டும். பாஸிஸக் கொள்ளைக் கூட்டத்தார் இந்திய மண்ணைத் தொடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அவர்களை இந்தப் பூலோகத்திலிருந்தே ஒழித்துவிட வேண்டும்" என்று எம். நீன்பே. முடிக்கிறார்.



## மனித இயற்கை

ஜீவனுடைய சுபாவம், ஒவ்வோர் உபாதி சேரும் தோறும் மாறுபடும். அலங்காரமான ஆடை அணிந்து கொண்ட மனிதனுக்கு, காமாதுரமான பாட்டு அவனை அறியாமலே வருகிறது. காலில் பூட்ஸ் போட்டுக் கொண்டால், மனிதனுக்குச் சற்று கர்வம் உண்டாகிறது; உடனே சீட்டியடிக்கிறான். அவன் மாடிப்படி ஏறினால், ஐரோப்பியனைப் போல் குதித்துக் குதித்து ஏறுகிறான். கையில் பேனா இருந்தால், ஒருவன் கிடைத்த கடிதாசியிலெல்லாம் எழுதுகிறான். பணம் வெகு பலம் படைத்ததோர் உபாதி; ஒருவன் அதைப் பெற்றதும், அடியோடு மாறி விடுகிறான்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.



# எங்கள் முருகன்

குன்றை யெறிந்ததுவும் எங்கள் முருகன்—குறக்
கொம்பை வளைத்ததுவும் எங்கள் முருகன்—அலர்க்
கொன்றை முடித்த சடைக் கொற்றவனுக்கே—ஐயம்
கொய்து விளக்கியதும் எங்கள் முருகன்.

தோகை விரித்த மயில் எங்கள் முருகன்—விண்ணில்
தோயு மிளங்கதிரு மெங்கள் முருகன்—எழும்
வாகை மலர்ச்செறிவு மெங்கள் முருகன்—இசை
வார்க்குந் தினைக்கதிரு மெங்கள் முருகன்.

மேட்டுத்தினை விளையுங் காட்டு நிலத்தில்—எழில்
மிஞ்சித்திரிந்த சிறு மின்னி னொளியைக்—கண்டு
வேட்டைக் கனியமுது கிட்டியதென்றே—குற
வேடம் புனைந்தலைந்த தெங்கள் முருகன்.

ஆசைத் தமிழறிந்த ஔவைதனக்கே—ஓர்
அந்திப் பொழுதினிலே நாவல் மரத்தில்—குறை
பேசிப் பரிகசித்துப் பிள்ளை நகையால்—கர்வப்
பீடை தகர்த்தெறிந்த தெங்கள் முருகன்.

சோதி வடிவழகு லட்சிய மவன்—தமிழ்
சொட்டுங் கவிதை யொளி உச்சியுமவன்—ஞான
போதவிரிவு தனுக் கெல்லையு மவன்—சுனைப்
போதில் வளர்ந்த சிறு கொற்ற முருகன்.



—'துறைவன்.'



# உழவுப் பாட்டும் சமதர்மமும்

மு. அருணாசலம்

ஜெர்மானியர் தொடுத்த அரக்கத்தனமான இந்தப் போரிலே, எல்லா நாடுகளும் தொடக்கத்தில் ஒன்றன்பின் ஒன்றாக முறியடிக்கப்பட்டு வீழ்ச்சியடைந்தன. போலந்து தொடங்கி, பிரான்ஸ்வரை தோல்வியற்ற நாடுகள் எண்ணற்றவை. இவ்வளவு தோல்விக் குள்ளும் ஒரே ஒரு நாடு மட்டும் முதலாவது போர் முனையிலே, எத்தனையோ நஷ்டங்களுக்கிடையிலும் சேதங்களுக்கிடையிலும் தோல்விகளுக் கிடையிலுங் கூட, எல்லையற்ற பெருமிதத்தோடு தலை தூக்கி நிற்கிறது; தன் கொடியை உயர்த்திப் பறக்கவிட்டு வெற்றி முரசு அடித்துக்கொண்டு முன்னேறி வருகிறது. அதன் வெற்றி முரசத்தைக் கேட்டு, தூக்கிப் பறக்கவிட்ட அதன் கொடியின் ஒளியைக் கண்டு, ஜெர்மானியர் தாம் முன்னர் வென்று கைக்கொண்ட நகரங்கள் ஒவ்வொன்றாகக் கைவிட்டு ஓடுகிறார்கள். ஓட்டம் இன்னும் நிற்கவில்லை. அவ்வூரை விட்டு நேற்று ஓடினார்கள், இவ்வூரை விட்டு இன்று ஓடுகிறார்கள் என்றே நாம் தினசரி பத்திரிகைகளில் படிக்கிறோம்.

> அசுரத்தனமான ஹிட்லரின் ஜெர்மனி, போரின் ஆரம்ப நாட்களிலே, ஜெயிக்கவே முடியாததோ என்று தோன்றியது. இப்போதோ, அதை ருஷியா புறமுதுகிட்டு ஓடச் செய்து வருகிறது. ருஷியாவுக்கு அந்தச் சக்தி எப்படிக் கிடைத்தது? அதன் சமதர்ம உழவு நாகரிகத்தாலேதான். தமிழ் நாட்டின் உழவர்களும் அப்படிப்பட்டவர்களே. அதை விளக்கும் சில அரிய உழவுப் பாட்டுக்களை, கட்டுரையாளர் விவரிக்கிறார்.

நமக்குத் திகைப்புண்டாகிறது. போருக்கென்றே நெடுங்காலம் ஆயத்தம் செய்துகொண்டு வந்த கொடிய வல்லரசான ஜெர்மனியா இப்படி ஓடுகிறது என்று வியப்படைகிறோம். இவ் வல்லரசை இவ்வாறு தோல்வியுற்று ஓடச் செய்த நாடு எது? அதுவே ருஷ்யா. ருஷ்யாவினிடம் அமைந்துள்ள ஆற்றல்தான் என்ன? என்ன வலி கொண்டு அது மற்றொரு நாட்டை—கொடிய வல்லரசை—இவ்வாறு முறியடிக்கிறது? என்றெல்லாம் எண்ணி நாம் அதிசயிக்கிறோம். ருஷ்ய நாட்டிலே, மக்களுடைய அரசு நடக்கிறது; எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்ற உணர்ச்சி அங்குள்ள மக்கள் அனைவருள்ளத்திலேயும் ஊறியிருக்கிறது. அதனாலே அவர்கள் இவ்வளவு உறுதியாகப் போரிட்டுத் தங்கள் சொந்த நாட்டைக் காத்து வருகிறார்கள்.

ருஷ்யாவிலே உண்மையான குடியரசு நடைபெறுகிறது. அந்நாட்டு அரசியல், மக்களால் நடைபெறுகிறது, மக்களுடைய நன்மைக்காக நடைபெறுகிறது.

எல்லோரும் பாடுபட வேண்டும், எல்லோருடைய உழைப்பும் எல்லோருடைய திறமையும் நாட்டுக்குரிய செல்வம், சொத்தெல்லாம் நாட்டுக் குரிய பொதுச்சொத்து என்ற கொள்கைகளைக்கொண்ட அரசியல் முறையே ருஷ்யருடைய வெற்றிக்குக் காரணமென்று அரசியல் வாதிகள் கூறுகிறார்கள்.

ருஷ்யருடைய வெற்றியை நாம் எண்ணிப் பார்க்கப்பார்க்க, அவ் வெற்றிக்குக் காரணமாயிருந்த அரசியற் கொள்கையையும் ஏற்றுக் கொள்ளத் தோன்றுகிறது. அத்தகைய தொரு சமதர்மம் நம் மக்களிடையே பரவிவிட்டதானால், நம் நாட்டுச் சமுதாய வாழ்வும் அரசியல் வாழ்வும் எவ்வளவோ முன்னேறி விடுமே என்று நாம் ஆராமை கொள்ளுகிறோம். ஆனால், இக் கொள்கைகளை அறவே கண்டிப்பவர்கள் நம் நாட்டில் பலர். ருஷ்யா என்றாலே பலருக்கு வேம்பு; சமதர்மம் என்றால் விஷம். ருஷ்ய நாடு என்ற நினைவும், சமதர்மம் என்ற அரசியல் - சமூகக் கோட்பாடும் நம்மிடையே அனாதியாயுள்ள தெய்வ பக்தி என்ற உணர்ச்சியைப் போக்கிவிடும் என்ற அச்சம் எல்லோருக்கும் இருக்கிறது. சமதர்மம் என்பதெல்லாம், கடவுட் கொள்கையே இல்லாத ருஷ்யாவுக்குப் பொருந்தும், புராதனமான தெய்வக் கொள்கையுடைய நம் நாட்டுக்குப் பொருந்தவே பொருந்தாது என்று எல்லோரும் சொல்வார்கள்.

இந்த நிலையிலே, நம் நாட்டிலே உண்மையில் ஒரு வகையான சமதர்மந்தான் பரவியிருந்தது என்றால், கேட்போருக்கு நம்பத் தோன்றாது. நாடு என்று சொல்லும்போது, நம் நாட்டுக் கிராமப் பிரதேசங்களிலே வாழும் பாமர மக்களையே குறிப்பிடுகிறோம். புது நாகரிக மோகத்தின் விளைவாக நகர வாழ்க்கையானது முற்றிலும் மாறிவிட்டது. இந்திய நாகரிகப் பாங்கை நகரவாழ்க்கையிலே இன்று காண்பது அபூர்வம்; இது எல்லா அம்சத்திலும் மேலை நாட்டினரின் நாகரிகத்தையும் வாழ்க்கையையும் தழுவியதாக இன்று அமைந்துவிட்டது. ஆனால், இன்னும் நமது நாடு முழுவதும் இவ்வித மாறுதலை அடையவில்லை. இந்நாகரிகத்தின் வேகம் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளுக்குள் போய்த் தாக்கியிருந்தபோதிலும், இன்னும், அம் மூலை முடுக்குகளான சிற்றூர்கள் தங்கள் புராதனப் பண்பாட்டை இழந்து விடவில்லை. தமிழர் தம் பழைய வாழ்க்கையையும் வாழ்க்கையின் லட்சியத்தையும் அங்கங்கே இன்னும் காணமுடிகிறது.

கிராமத்திலுள்ள உழவரிடையே இப்போது நாம் போய் வருவோம். இவர்களுடைய வாழ்க்கையில் எவ்வளவோ உற்சாகம் காணப்படுகிறது. இவர்கள் எவ்வளவு ஏழ்மை நிலையிலிருந்தாலும், வாழ்க்கையிலே சுவை குன்றாமல் மகிழ்ச்சி கொள்ளுகிறார்கள். ஆனந்தமாக ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் காலங் கழிக்கிறார்கள். இவர்கள் செய்யும் தொழிலிலுமே இந்த ஆட்டமும் பாட்டும் புகுந்திருக்கின்றன. ஒரு நிகழ்ச்சியை இங்கே பார்க்கலாம்.

வயலிலே எருவிட்டு உழுது, சேறுக்கிப் பரம்படித்து ஆக வேண்டிய வேலைகள் யாவும் முடிந்தன. நாற்றங்காலிலிருந்து நாற்றுக்களைப் பறித்தெடுத்து முடி முடியாக முடிந்து, நட வேண்டிய வயலுக்கு முடிகளை

யெல்லாம் கொண்டுவந்து விட்டார்கள். உழத்திகள் பத்துப் பன்னிரண்டு பேர் கூட்டமாக நட வந்திருக்கிறார்கள். எல்லோரும் வயலில் இறங்கி, சேற்றில் நின்றுகொண்டு, நாற்று முடியைக் கையில் எடுத்துக் கொள்கிறார்கள். உழத்திகளிலே தலைவியாக ஒருத்தி இருக்கிறாள். அவள் நன்றாய்ப் பாட வல்லவள். முதலிலே அவள் பாடத் தொடங்குகிறாள். அவள் பாடிய வரியை மற்றெல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பாடுகிறார்கள். பாட்டுப் பாடுகிற சுகத்திலே சோர்வு தோன்றாமல் விரைவாக நடவு வேலை நடக்கிறது.

*இந்திரனை நோக்கி
எடுத்தேன் திருஅலகு*

என்று முதலாவதாகப் பாடுகிறாள்; எல்லோரும் கூடவே தொடர்ந்து பாடுகிறார்கள்.

இவை, முதலாவதாக உழத்திகள் தெய்வத்தை வழிபடுவதற்காகச் சொல்கின்ற சொற்கள்; நம் நாட்டிலே எந்த வேலையாயிருந்தாலும், முதல்வேலை தெய்வ வழிபாடல்லவா? இந்திரனை இவள் வழிபடுகிறாள். இந்திரனுக்கு எதற்காக இங்கே வணக்கம் என்ற கேள்வி எழலாம். பயிர்த்தொழிலுக்கு முக்கியமாக வேண்டியது மழை. மழை தரும் மேகங்களுக்கு நாயகன் இந்திரன் என்பது நமது பழங்கொள்கை. ஆகவே, பயிர்த்தொழிலுக்கே இந்திரனைத் தெய்வமாகக் கொள்கிறோம். "வேந்தன் மேய தீம் புனல் உலகமும்" என்பது தொல்காப்பியம். (வேந்தன்-இந்திரன். புனல் உலகம் - பயிர்த் தொழில் நடக்கும் வயல்களாகிய மருத நிலம்.) சோழர் தலை நகரான புகார் நகரத்திலே முற்காலத்தில் இந்திரனுக்காகத் திருவிழா நடந்ததாம்.

இவ்வாறு இந்திரனை வணங்குவது நாட்டிலுள்ள பழைய வழக்கம். இதை யொட்டி, நட வந்த உழத்தி, முதலிலே இந்திரனுக்கு வணக்கம் செலுத்துகிறாள். வணங்கிவிட்டு, கையிலே நாற்று முடியிலிருந்து பயிர் அலகு ஒன்றை எடுத்து நடப்போகிறாள். எப்படி நடுகிறாள்?

*சந்திரனை நோக்கிச்
சாத்தினேன் திருஅலகு*

என்று சொல்லி, கையிலெடுத்த பயிரலகைச் சேற்றிலே நடுகிறாள். இந்திரன் என்றவுடனே, சந்திரன் இயல்பாக அவள் சொல்லிலே பிறந்து விடுகிறான். சந்திரன் பொழிகின்ற பால் போன்ற நிலவு உலகைக் குளிர்வித்து மகிழ்விப்பதுபோல, நட்ட அலகும் பசுமைகொண்டு செழித்து வளர்ந்து, உழவர் உள்ளத்தைக் குளிர்வித்து உலகை வாழ்விக்க வேண்டும் என்பது பாவம்.

மக்கள் உயிர் வாழ்வதற்குக் காரணமாயிருக்கும் அரிசியை இனித் தரப்போகின்றமையால், பயிரின் அலகு, திரு என்ற அடைமொழி பெற்றுத் திரு அலகு ஆயிற்று.

கடவுள் வணக்கம் ஆனவுடனே, நடவுவேலை வேகமாக நடக்கிறது. உழத்தி பாடிக்கொண்டே போகிறாள். பயிர் எப்படி வளர வேண்டும் என்றெல்லாம் சொல்கிறாள்:

*நிறுத்தினேன் திரு அலகு
நின்று பயிர் ஏறவேணும்.*

*சாத்தின திரு அலகு
சாய்ந்து பயிர் ஏறவேணும்.*

நட்டு நிறுத்திய பயிர் கிளைத்துச் செழித்து வளர்ந்து பயிர் ஏற வேண்டும். அதோடுகூட, சாய்ந்து பயிர் ஏறவேண்டுமாம்.

பயிரெல்லாம் வளர்ந்து முதிர்ந்து கதிர் விட்டு, கதிர் முற்றிய வுடனே, கதிர்க் கனத்தினுல் பயிர் சாய்ந்து நிலத்தில் கிடக்கு மல்லவா? இதை எண்ணி அவ் வுழத்தி, பயிர் சாயவேண்டும் என்கிருள்.

பிறகு, விளைவு எப்படி யிருக்க வேண்டும் என்பதையும் சொல் கிருள். பயிரிலே, பதரோ சாவியோ இருத்தலாகாது. 'கட்டுக் கலங் காணும், கதிர் உழக்கு நெற் காணும்' என்பார்க ளல்லவா? அந்த முறையிலே கதிர்களெல்லாம் நெல்லாக விளைந்து, கதிர்க்கட்டும் நெல்லும் போடுவதற்குக் களத்திலே இடமே இல்லை என்னும்படியாக விளைவு சிறக்க வேண்டுமாம்!

நெல்லா விளையவேணும்
நெடுகளங்கள் ஏறவேணும்

கதிரா விளையவேணும் - எங்களையா
களஞ்சியங்கள் ரொம்பவேணும்

என்று வரப்போகிற அறுவடைக் காலத்தை எண்ணி, உற்சாக மாய்ப் பாடுகிருள். விளைந்த நெல்லெல்லாம் தங்கள் பண்ணைத் தலைவருடைய நெற்களஞ்சியங் களை நிரப்பவேண்டும் என்று பாடுகிருள்.

இதை நாம் சற்றுக் கூர்ந்து சிந் தித்தல் வேண்டும். விளைவு அமோகமாய்ப் பெருகவேண்டும் என்று வேண்டுகிற உழத்தியான வள், தனக்கோ தன் குடும்பத் துக்கோ வரும்படி அதிகம் கிடைக்கவேண்டும் என்று பிரார்த்திக்கவில்லை. தன் பானை யிலே நெல் வந்து நிரம்புவதாக என்றும் வேண்டவில்லை. தான் வேலை செய்கின்ற பண்ணைத் தலைவனுக்கு, தன் எசமானனுக்கு, விளைவெல்லாம் அதிகமாகி, களஞ்சியங்களெல்லாம் நிரம்பி ஞல் போதுமானது என்கிருள். இதனினும் பார்க்கத் தனக் கென்று தனியே எதுவும் வேண்டு மென்று அவள் சொல்லவில்லை.

இந்த உழத்தியின் கூற்று, பழங் கால நாட்டுப்புற வாழ்வின் சிறப் பைக் காட்டுகிறது. இக்காலத்திய முதலாளி - தொழிலாளிச் சண்டையெல்லாம் அக்காலத்தில் கிடையாது. முதலாளி - தொழி லாளி என்று பிரிக்கும் மனப் பான்மை அறவே இல்லை. பயிர்த் தொழிலில் ஈடுபட்டோர் அனை வரும் ஒரே நோக்கத்தோடுதான் வாழ்ந்தார்கள். பண்ணைக்காரரா யிருந்தோர் பயிர்த்தொழில் செய் வதற்குஏழை உழவரைக்கொண்டு வேலை நடத்தியது உண்மை தான். ஆயினும், இவர்களிடையே பணவரவு செல்வு என்பதே கிடை யாது. இதனுலே லாப நஷ்டம் பார்க்கிற பழக்கமும் ஏற்பட வில்லை. பண்ணைக்காரன், எவ் வளவு அதிகச் செல்வமுடையவனு யிருந்தபோதிலும், சேற்றில் இறங்கிக் கலப்பையைப் பிடித்து உழுவது அக்காலத்தில் வழக்கமா யிருந்தது. எவ்வளவு உயர்ந்த நிலையிலிருந்தோரும் உடலை வருத்தி உழைப்பது சாமானிய வழக்கம். ஆகவே, எல்லோரும் உழைத்த காலத்தில், எல்லோரும் சமம் என்ற உணர்ச்சி பெருகி யிருந்தது. தவிர, கஷ்டப்பட்டு உழைப்பவர்களைத் தாழ்ந்தவர் களாகக் கருதும் இக்காலத்து 'நாகரிக' மனப்பான்மை அன்று எவ்வகையிலும் தோன்றவில்லை.

மற்ருேருண்மையும் கவனிக்கத் தக்கது. செல்வம் படைத்த வேளா ளரே உழுது, கஷ்டவேலை செய் யும் பழக்கமுடையவர்களா யிருந்தமையால், வருந்தியுழைத்த பிறர் வருத்தம் இன்னதென்று அவர்கள் உணர்ந்திருந்தார்கள்.

உழவர் உழத்தியர்தம் எளிய வாழ்க்கையிலே என்னென்ன துன்பங்களுண்டு என்று அவர்கள் அறிந்திருந்தார்கள். இத்துன்பங்களையெல்லாம் தங்களாலான வரையில் போக்கியும் வந்தார்கள். ஏழை உழவனுக்குத் தாங்களே குடிசை கட்டிக் கொடுத்தார்கள். வேண்டிய போதெல்லாம் அவன் சாப்பாட்டுக்கு நெல்லும் அடுப்புக்கு விறகும் பாலுக்கு வேண்டிய ஆடும் மாடும் தந்தார்கள். அவன் வீட்டில் நிகழ்ந்த கலியாணம் முதலியவற்றைத் தங்கள் செலவிலேயே செய்தார்கள். அவன் வாழ்விலே துன்பம் வந்த காலத்து அத் துன்பத்தைத் தங்களுக்கு வந்த துன்பமாகவே கொண்டார்கள்.

இவ்வகையிலெல்லாம் அக்காலத்தில் உழவனுக்கும் அவன் எசமானனுக்கும் ஒற்றுமையும் சகோதர நேயமும் மிகுந்திருந்தது. மிராசுதாரா யிருந்தவர்கள் தங்களுக்குக் கீழ்ப்பட்டிருந்த குடியானவர்களையும் உழவர்களையும் அன்புடனும் சகோதரப்பான்மையுடனும் நடத்தியதன் பயனாக, அவர்களுக்கும் இவர்களிடம் அன்பும் விசுவாசமும் மிகுந்திருந்தது தாங்கள் வேறு தங்கள் பண்ணைத் தலைவன் வேறு என்று அவர்கள் எண்ணியதில்லை. அவனுக்காக அவர்கள் உயிரையும் கொடுக்கத் தயாரா யிருந்திருக்கிறார்கள்.

இது அக்கால வாழ்க்கை. ஓர் ஊரிலுள்ள நிலங்கள் யாவையும் ஒருவருக்கே அல்லது ஒரு சிலருக்கே சொந்தமா யிருந்திருக்கலாம். ஆனால், அவற்றின் பலனை அவ்வூரிலுள்ள எல்லா மக்களும் அனுபவித்துவந்தார்கள். விளைவு, நிலத்துக்குடையவருக்கு மட்டும் சொந்தம் என்பதில்லை; நிலமே இல்லாத புரோகிதருக்கும் அவ் விளைவில் பங்குண்டு; சேற்றிலேயே இறங்கி வேலை செய்யாமல் வெறுந் தப்படித்துச் சேவகஞ் செய்த வெட்டியானுக்கும் அதில் பங்குண்டு. தச்சன், கொல்லன், வண்ணான், நாவிதன் போன்ற தொழிலாளிகளுக்குள்ள உரிமையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். ஏதோ ஒரு காரணத்தினாலே, நிலமுழுதும் ஒருவருக்கே சொந்தமா யிருந்தது உண்மைதான்; ஆனால் இது தற்செயலாகப் பழமையாயிருந்த ஒரு நிலை. இந்த நிலத்தில் பலன் உண்டுபண்ணுவதற்காக எல்லோருமே ஒருமித்துப் பாடுபட்டார்கள்; எல்லோருமே ஒருமித்துப் பலனை அனுபவித்தார்கள்.

நம் நாட்டில் பழமையாக வழங்கிய இந்த நிலையை, சமதர்மம் என்ற இக்காலக் கொள்கை ஒருவகையில் நிலவிய காலம் என்று எளிதில் கூறிவிடலாம். நிலமுடையவர்கள் வாழ்ந்தால் ஊர் முழுதுமே நல்வாழ்வு பெறும், எல்லோருமே நன்றாக வாழலாம், நாடும் வாழும் என்றே குடிமக்கள் யாவரும் அப்போது கருதினார்கள். எல்லோருக்கும் வாழ்க்கைக்குத் தேவையான பொருள் யாவும் தேவையான அளவுக்குக் கிடைத்துவந்தன. இது தானே ஓரளவுக்குச் சமதர்ம நிலையென்பது? இதுதான் சமதர்மம் என்பதை நாம் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், நம் நாட்டின் எளிய மக்கள் அனைவருக்கும் நன்மையைத் தரவல்ல வாழ்க்கை முறை இதுவே என்பதை மறுக்க வியலாது. நமது வாழ்க்கை முறை அன்றிருந்து இன்று எவ்வளவோ மாறிவந்து, தொழிலாளி - முதலாளிப் பூசல்கள் இக்காலத்தில் மலிந்துவிட்

டன என்ற காரணத்தால் அவ் வாழ்க்கை முறை மேலானதன்று என்று தள்ளிவிடவும் முடியாது.

மிராசுதாருடைய களஞ்சியங்கள் நிரம்பவேண்டும் என்று உழத்தி வேண்டுவதிலே மேற் சொன்னதொரு வாழ்க்கை முறையில் விளைந்த மனமகிழ்ச்சியை நாம் காண்கிறோம். நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோலுயரும், கோலுயரக் கோன் உயர்வான் என்பதன் உட்கோளும் இதுவே. பண்ணைக்காரர் வாழ்ந்தால், தானும் நிச்சயமாக நல்வாழ்வு வாழலாம் என்ற துணிவோடு உழத்தியானவள் உல்லாசமாக மேலும் பாடுகிறாள் :

சம்பளந்தான் ஏதுக்கு?-எங்களையா
சலுகையொன்று போதாதா?

பயிர்த்தொழில் செய்வோரிடம், சம்பளம் என்றபேச்சே கிடையாது; வேலைக்குரிய கூலி முழுவதையும் பணமாய்க் கொடுக்காமல் தானியமாய்க் கொடுப்பார்கள். உழவர்கள் உழுதாலும் நட்டாலும் அறுப்பறுத்தாலும் வேலியடைத்தாலும், எல்லா வேலைகளுக்கும் நெல்லே கூலியன்றிப் பணமன்று. கேழ்வரகு அல்லது கம்பு கண்டுமுதல் செய்தால், கூலியும் கேழ்வரகு அல்லது கம்புதான். உளுந்து அல்லது பயறு கண்டுமுதலானால், கூலியும் உளுந்து அல்லது பயறுதான். இந்த நிலை மூற்காலத்தில் வழங்கியது மட்டுமல்ல, இன்றும் பயிர்த்தொழில் செய்வோரிடையே சாதாரணமாய் வழங்கும் வழக்கம். எவ்வளவு ஏழையாயிருந்த போதிலும், பயிர்த்தொழில் செய்பவன் தன் உணவுக்கு வேண்டிய நெல்லையும் பயற்றையும் வரகையும் பிறதானியங்களையும் கூலியாகப் பெற்றுக் கொள்ளுகிறான். ஆகவே அவனுக்கு, சாப்பாட்டுக்கு வழியில்லை என்ற நிலை ஒரு நாளும் ஏற்படுவதில்லை. சாப்பாட்டுக் கவலையில்லாதபோது, பணக் கவலை அவனுக்கு ஏன் வரப் போகிறது? உடுப்பதற்கு வேண்டிய துணிமணிகள் யாவும் பண்ணையிலே அவன் குடும்பத்துக்குப் பரிசாகக் கிடைத்து விடுகின்றன. ஆகவே, உழவனுக்குச் சம்பளத்தைப்பற்றிய கவலை ஏது? பண்ணைக்காரனுடைய அன்பு ஒன்றே அவனுக்கு வேண்டுவது. எப்படியும் மற்றவர்களை வைத்துப் பராமரித்தே பயிர்த்தொழிலை நடத்திவரவேண்டியவனான பண்ணையானும் உழவனை விட்டுவிட்டு எங்கே போகப் போகிறான்? ஆகவே, அவனுடைய அன்பு உழவனுக்கு வேண்டிய அளவு இருக்கிறது. வேறு என்னதான் அவனுக்கு வேண்டும்? ஒன்றும் வேண்டுவதில்லை என்றுதான் உழவன் சொல்வான் - அதாவது பழைய நாட்டுப்புறத்துச் சமதர்மக் கொள்கையானது மன மொத்த முறையிலே ஆண்டானிடத்தும் ஆளிடத்தும் நிலவப் பெற்று வருங்காலத்தில், பயிர்த்தொழில் செய்துவருகின்ற உழவன் இப்படிச் சொல்வான்.

இதையேதான் நமது உழத்தியும் சொல்லுகிறாள் :

சம்பளந்தான் ஏதுக்கு?-எங்களையா
சலுகையொன்று போதாதா?

இந்தச் சலுகையையும் இவள் மிக நன்றாய் அனுபவித்திருக்கிறாள். ஏழை மக்களுக்குப் பசிப்பிணி ஒன்றே துன்பந் தருவது. அதைக் காலமறிந்து போக்கிவிட்டால், வேறு அவர்களுக்கு வேண்டுவதொன்றும் இல்லை. பண்ணையான் இவ்வுழத்தியின் குடும்பம் பசிப்பிணியால் துன்புறுதவாறு நன்றாய்ப் பாதுகாத்து வந்திருக்கிறான். நெல்லாகவும் கூலியளந்திருக்கிறான் ; அரிசியாக

வும் கொடுத்திருக்கிறான். சில சமயங்களில், உழத்தியும் உழவனுமாக வயற் கரையிலே நின்று உழைக்கவேண்டி வந்தபோது, அவர்களுக்கு அங்கேயே சோறும் கொண்டுவந்து போட்டிருக்கிறான். உழத்தியும் வயலிலே முனைந்து வேலை செய்யும்போது, அவள் குடிசையிலே யார் கஞ்சி காய்ச்சுவார்கள்? உழவனுக்குச் சோறு எங்கிருந்து வரும்? பண்ணையானே இப்படிப்பட்ட சமயங்களில் சோறு போட்டிருக்கிறான்.

இந்த விதமாகவெல்லாம் உழவர் அனைவரும் பண்ணையானுடைய அன்பையும் ஆதரவையும் பரம்பரையாகப் பெற்று வந்திருக்கிறார்கள். இந்தப் பரம்பரை விசுவாசமே உழத்தியை இவ்வாறு பாடச் செய்கிறது :

*காசாப் படியளந்தால்*
*கனத்தநேரஞ் செல்லுமென்று,*

*நெல்லாப் படியளந்தால்*
*நீண்ட நேரஞ் செல்லுமென்று,*

*அரிசியாப் படியளந்தால்*
*ஆக்க நேரஞ் செல்லுமென்று,—*

*சோறாப் படியளக்கும் - எங்களையா*
*சுவாமியார் பண்ணையிது !*

என்று நமது உழத்தி பாடுகிறாள்.

இந்தப் பாட்டை *வயலில் சேற்றி லிறங்கி நின்று நடவு நட்டுக்கொண்டிருக்கும் உழத்திகள் பாடக்கேட்கிறோம்; புத்தகத்திலே - வெள்ளைக் காகிதத்திலே கறுப்புமையால் எழுதியோ அச்சடித்தோ வைத்துக்கொண்டு - படிக்கவில்லை என்பது நினைவிருக்கவேண்டும். நினைவிருந்தால், இதிற் சொல்லிய பொருளும் சொல்லிய வாழ்க்கை நிலையும் சமுதாய நிலையும் வெறுங் கற்பனையல்லவென்பது புலப்படும்; தொழில் செய்து உயிர்வாழும் ஏழைப் பெண்ணொருத்தி சொல்லுகின்ற உண்மை என்பதும் புலப்படும.

---

** தஞ்சாவூர் ஜில்லாவிலே ஒரு சிற்றூரில் நட்வு நடும் பறையர் குலப் பெண்ணொருத்தி சொல்லக் கேட்டு எழுதிக்கொண்ட பாட்டு இது.*



## வைஸிராய்கள் பிரயாணம்

*லண்டனிலிருந்து வேவல் சில தினங்களில் பறந்து வந்துவிட்டார்; லின்லித்கோவும் அப்படியே விரைந்து போய்விட்டார். இது இந்தக் காலத்தில். முன்னாட்களிலோ, வைஸிராய்களும் கவர்னர்களும் லண்டனுக்கும் இந்தியாவுக்கும் பல மாத காலம் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது.*

*1742-ஆம் வருஷம் ராபர்ட் கிளைவ், ஒரு வருஷத்துக்கு மேலாயிற்று இந்தியாவுக்கு வந்து சேர. ஹேஸ்டிங்ஸ், எட்டு அல்லது ஒன்பது மாதங்கள் பிரயாணம் செய்துதான், முதன்முறை இந்தியாவுக்கு வந்துசேர முடிந்தது. 1788-ஆம் ஆண்டு ஹேஸ்டிங்ஸ் திரும்பிச் செல்லுகையில், நாலு மாதம் பிரயாணம் செய்தார். ஆனால், 1789-ஆம் வருஷம் கிழக்கு டச் இந்தியன் ஒருவன், ஆம்ஸ்டர்டாமிலிருந்து புறப்பட்டு, நடு வழியில் பல இடங்களில் நீண்ட காலம் தங்கித் தங்கி, பதினேழு மாத காலத்தில் வங்காளத்துக்கு வந்து சேர்ந்தான். 1815-ஆம் ஆண்டில், வாட்டர்லூ யுத்தம் பற்றிய செய்தி, ஐந்து மாதம் கழித்துத்தான் இந்தியாவுக்கு வந்து எட்டியது. 1836-ஆம் ஆண்டில் லார்டு ஆக்லாண்டு இங்கிலாந்துக்குத் திரும்பியபோது, ஐந்து மாத காலம் பிரயாணம் செய்தார்.*

# அது வேறு உலகம்





ஆலிவ் ஷ்ரீனர்

நான் சொல்லப் போகும் சம்பவம் இந்த உலகில் நடக்கவில்லை; வேறு உலகில் நடந்தது. வானவீதியிலே நட்சத்திரங்களுக்கிடையிலுள்ளதோர் உலகிலே நடந்தது. அங்கே நடப்பவை யாவும் இங்கே நடப்பதில்லை.

அங்கே, ஓராடவனும் ஒரு பெண்ணும் இருந்தார்கள். அவர்கள் ஒன்றாகவே வாழ்ந்து, ஒன்றாகவே தொழில் செய்து வந்தார்கள்; நெடுநாளாக அவர்கள் தோழர்களாகவே பழகிவந்தார்கள். இந்த உலகிலும், சிற்சில சமயங்களில் இப்படி நடப்பதுண்டல்லவா?

ஆயினும், இவ்வுலகி லில்லாததொன்று அவ்வானுலகிலே இருந்தது. மரங்களடர்ந்த ஒரு காடு. அதிலே, ஓரிடத்தில், சிறிதும் இடையீடில்லாதபடி, மரங்களும் செடிகளும் ஒன்றையொன்று பின்னிக் கிடந்தன; சூரிய கிரணம் அங்கு பட்டதேயில்லை. அவ்விடத்தில் ஒரு கோவில் இருந்தது. பகலிலே, அதைச் சுற்றிலும் அமைதி நிலவியிருக்கும். ஆனால், நள்ளிரவிலே, சந்திர கிரணங்கள் மரங்களின் உச்சியிலே தவழ்ந்து வர, அங்கங்கே சில நட்சத்திரங்கள் பிரகாசிக்க, தரையிலே நிசப்தம் குடிகொண்டிருக்கும்போது, ஒருவர் தனியராக மெல்லச் சென்று, அக்கோவிலின் பலிபீடத்துப் படிகளில் முழந்தாளிட்டு வணங்கி, மார்பிலுள்ள உத்தரீயத்தை அகற்றி விட்டு, பலிபீடத்துப் படிகளிலே தமது இரத்தம் ஓடும்படியாக மார்பிலே ஓராயுதத்தால் குத்திக்கொண்டால், அப்படிச் செய்து வணங்கியவர் எண்ணியவெல்லாம் எண்ணியாங்கு எய்துவர். இவ்வளவும் அங்கே நடக்கும்; ஏனென்றால், அது வானிலே உள்ளதோருலகு என்றும், அங்கே நிகழ்பவை இங்கு நடப்பவற்றைப் போன்றவையல்லவென்றும் நான் முன்னமே சொல்லியிருக்கிறேன்.

இனி, மேற்கூறிய ஆடவனும் பெண்ணும் ஒருமித்து நடந்து வந்தார்கள். அவனிடத்திலே அவளுக்கு அன்பு உண்டு. ஒரு நாள், நள்ளிரவிலே, மரத்தினுச்சியிலுள்ள இலைகளெல்லாம் சந்திரனொளியிலே பளபளவென்று மின்னிக்கொண்டிருந்தன; கடலிலெழுந்த அலைகள் யாவும் வெள்ளிபோலப் பிரகாசித்தன. அந்த நள்ளிரவிலே, அப்பெண் தனியளாக அக்காட்டினுள்

காதல்! அதற்காக அவள் தியாகம் செய்கிறாள்; துன்புறுகிறாள்; வீரமும் பெறுகிறாள் காதலனுக்காக. காதலனின் இன்பமே அவளுடைய இன்பம். அவளுக்கு மிகுந்தது என்ன? கண்ணீர்தான். ஆனால், அந்தக் கண்ணீரிலேயே ஓர் ஆனந்தமுண்டு. அதை அவளுக்கு மறுக்க யாரால் ஆகும்?

நுழைந்தாள். காடு இருண்டிருந்தது. அவள் காலடியிலே கிடந்த சருகுகளிலே திட்டுத் திட்டாக நிலவு விழுந்தது. தலைக்குமேலே மரக்கிளைகள் ஒன்றையொன்று பின்னிக் கிடந்தன. போகப்போக இருள் அதிகமாயிற்று; துளிக் கூட நிலவைக்காணும். கோவிலையடைந்தாள்.

பலி பீடத்தருகிலே முழந்தாளிட்டு வணங்கிப் பிரார்த்தித்தாள். பிரார்த்தனைக்கு யாரும் இரங்கினதாகத் தெரிய வில்லை. பிறகு, அவள் தன் மார்பைத் திறந்தாள். கூர்மையான ஒரு கல் அங்கே கிடந்தது. அதை யெடுத்துத் தன் மார்பிலே குத்திக்கொண்டாள். சில இரத்தத் துளிகள் படியில் சிந்தின.

"உனக்கு என்ன வேண்டும்?" என்று ஒரு குரல் கேட்டது.

"ஆடவனொருவன் இருக்கிறான். எனக்கு யாவற்றினும் பிரியமானவன். அவனுக்கு உவப்பான காரியங்கள் அனைத்தினுஞ் சிறந்ததொரு காரியம் அவனுக்கு என்னால் ஏற்படவேண்டும்" என்று அவள் வேண்டினாள்.

"நீ கேட்ட வரத்தை அளித்தோம். நீ விரும்பிய நன்மை அவனுக்கு ஏற்படும்" என்று அக் குரல் சொல்லிற்று.

அவள் எழுந்தாள். மார்பிலுள்ள காயத்தில் தன் ஆடையை வைத்து இறுக மூடி, கையால் அமுக்கிக் கொண்டு, காட்டினின்றும் வெளிவந்தாள். அவள் பின்னே சருகுகள் சலசல வென்று பறந்தன. வெளியே, நிலவில், தென்றல் மிருதுவாக வீசிக்கொண்டிருந்தது; கடற்கரையிலே மணலெல்லாம் பளபளவென மின்னின. கரைநெடுக அவள் ஓடிவந்தாள். வந்தவள் திடீரென்று நின்றாள்.

தொலைவிலே, நீரின்மேல் ஏதோவொன்று அசைவது மங்கலாகப் புலப்பட்டது. கண்ணிலே கையை வைத்து மறைத்துக் கொண்டு உற்று நோக்கினாள். ஒரு படகு தெரிந்தது. நிலா வெளிச்சத்திலே அது வேகமாகக் கடலினுள் சென்று கொண்டிருந்தது. அதிலே ஒருவன் நிமிர்ந்து நின்றான்; முகம் தெளிவாகத் தெரியவில்லை; ஆனால், அந்த உருவம் அவளுக்குத் தெரிந்த உருவந்தான். படகு விரைந்து போய்க் கொண்டிருந்தது; அதை யாரும் துடுப்பு போட்டுத் தள்ளியதாகத் தெரியவில்லை. வெளிச்சம் மங்கலாக இருந்தபடியினாலே அவள் கூர்ந்து பார்க்க இயலவில்லை. படகோ, கரையிலிருந்து வெகு தூரத்திலிருந்தது; அதன் முனையிலே மற்றோருருவம் உட்கார்ந்திருந்தது போலக்காணப்பட்டது. வர வர, படகானது வேகமாகக் கடலினுள்சென்றது. அவள் கரை நெடுக ஓடிப் பார்த்தாள்; படகோ தூரத்திலிருந்ததே ஒழிய, அதை அவள் அணுகியதாகத் தெரியவில்லை. மார்பிலே அவள் அமுக்கி மூடிய ஆடை திறந்து விலகிற்று. நீண்டு அவிழ்ந்து தொங்கிய அவள் கூந்தலிலே நிலவு பிரகாசித்தது. கைகளை நீட்டி உதறினாள்.

அவளருகிலே, "என்ன சங்கதி?" என்றொரு குரல் கேட்டது.

"என் இரத்தத்தைச் சிந்தி, எல்லா வரங்களினும் மேலான வரத்தை அவனுக்காக நான் பெற்று வந்தேன். அதை அவனிடம் அளிப்பதற்காக அவனைத் தேடி நான் வரும்போது, அவன்

என்னை விட்டுப் போகிறானே!" என்று அவள் கதறினாள்.

"நீ கேட்ட வரம் சித்தித்திருக்கிறது. அவனுக்கு உவப்பான வரம் அளிக்கப்பட்டது" என்று அக்குரல் மெல்ல உரைத்தது.

"அவனுக்கு உவப்பானது எது?" என்று கேட்டாள்.

"உன்னை விட்டுப் பிரிய வேண்டுமென்பது" என்று அக்குரல் விடையளித்தது.

அவள் அப்படியே அசைவற்று நின்றாள். தூரத்திலே கடலில், நிலவொளியையும் கடந்து அப் படகு மறைந்து விட்டது.

அப்போது, அதே குரல், "உனக்குத் திருப்திதானா?" என்று அவளைக் கேட்டது.

"எனக்குத் திருப்திதான்" என்று அவள் மறுமொழி கூறினாள்.

அவள் காலடியிலே, கடலலைகள் வந்து கரையிலே மெதுவாக மோதிக்கொண்டிருந்தன.



## அடிமையின் திறமை

(பால்பன் என்ற துருக்கியன், சிறு வயதிலே களவாடப்பட்டு, இந்தியாவுக்கு ஓர் அடிமையாக வந்து சேர்ந்தான். பால்பனைக் களவாடியவர்கள், அல்டாமிஷ் என்ற சுல்தானிடம் அவனை விற்க வந்தார்கள்.

"குட்டையும் விகாரமுமாயிருக்கும் இவனை வாங்கி நான் என்ன செய்வது? எனக்கு வேண்டாம்" என்றார் சுல்தான்.

உடனே பால்பன், "சுல்தான் அவர்களே! இது வரையில் நாங்கள் பல அடிமைகளை வாங்கியிருக்கிறீர்களே; அவர்களையெல்லாம் யாருக்காக வாங்கினீர்கள்?" என்று கேட்டான்.

"எனக்காகத்தான்" என்றார் சுல்தான்.

"அப்படியானால், என்னைக் கடவுளுக்காக வாங்குங்களேன்" என்றான் பால்பன்.

அந்த வார்த்தையைக் கேட்ட சுல்தான் களிப்படைந்து, "அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி, பால்பனை வாங்கினான்.

தண்ணீர்க்காவடி சுமக்கும் வேலையில், முதலில் பால்பன் நியமிக்கப்பட்டான். கொஞ்ச காலத்தில் அவனுடைய திறமையைக் கண்டு, அதைவிட மேலான பதவியை, அவனுக்குச் சுல்தான் அளித்தார். பின்னும், பால்பன் படிப்படியாக மேலேறி, கடைசியில் டில்லி சுல்தானாகவும் ஆட்சி புரியலானான்.)

## போர்க்களத்தில் பிரார்த்தனை

(அவுரங்சிப்பை, அவருடைய தந்தை, 1647-ஆம் ஆண்டில் மத்திய ஆசியாவில் போரிட்டு, பாக். பாதாக்கான் என்னும் இடங்களை மீட்பதற்காக அனுப்பினார். புகாராவின் அரசனை அப்துல் அஜிஸ்கானின் படைகளும் அவுரங்சிப்பின் முகலாயப் படைகளும் மிக்க பயங்கரமாய்ப் போரிட்டுக்கொண்டிருக்கின்றன. மாலையில் தொழுகை நேரம் வந்துவிட்டது.

உடனே அவுரங்சிப், தமது யானைமீதிருந்து கீழே குதித்து, முறைப்படி தொழுகை நடத்த ஆரம்பித்தார். இது அபாயமாகும் என்று அவருடைய ஊழியர்கள் எவ்வளவோ தடுத்தும், அவர் கேட்கவில்லை.

இரண்டு சேனைகளிலுமிருந்த அனைவரும் காண, அவுரங்சிப் இவ்வாறு தொழுகை நடத்துவதைக் கேட்ட எதிரி மன்னன் அப்துல் அஜிஸ், "இத்தகைய மனிதனோடு போரிடுபவன், ஆத்மநாசமே அடைவான்" என்று சொல்லி, போரை நிறுத்திவைத்து விட்டான்.)



# அழகிய அண்ணாமலை நகரம்

பி. கோதண்டராமன்

நான் அண்ணாமலை நகரை அடைந்தபோது, மாலை சுமார் மணி 5-30 இருக்கும். மாணவர்கள் சிறு சிறு கூட்டங்களாக என் எதிரே வந்து கொண்டிருந்தார்கள். பாதையின் இரு புறமும் அழகிய கட்டடங்கள் காட்சி யளித்தன. வலது புறத்தில் உப அத்தியட்சகரின் பங்களாவும், இடது புறத்தில் வரிசையாக ஆசிரியர் சிலரின் விடுதிகளும் காணப்பட்டன. அங்குமிங்கும் பலநிற நீர்ப்பூக்கள் பூத்த குளங்களும் இருந்தன. வானுற ஓங்கிக் கம்பீரமாக நின்ற பல்கலைக்கழகக் கட்டிடங்கள் காட்சியளித்தன. இருட்டிக்கொண்டே வந்ததால், நான் அவைகளைத் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. உள்ளே நுழைந்து மாணவர் விடுதிகளை விசாரித்துக் கொண்டே சென்றேன். தென்னண்டை வாடையில் வரிசை வரிசையாக மாணவர் இல்லங்கள் நின்றன. என் நண்பரின் அறையைத் தேடிச் செல்லுகையில், சில மாணவர்கள் அவருடைய அறைக்கு என்னைக் கொண்டு போய் விட்டார்கள். அதற்குள் அவரே வந்து என்னை வரவேற்றார். அவர்களுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பின், சிற்றுண்டி அருந்தினேன். மணி 9-30 ஆயிற்று. மாணவர் விடுதிகளைப் பார்வையிடும் வார்டன், ஒவ்வோர் அறையாகச் சென்று மாணவர் அனைவரும் இருக்கிறார்களா என்று பார்வையிட்டார். மாணவர் இரவில் விடுதியில் தங்கவேண்டும்; எக்காரணம் பற்றியாவது வெளியே செல்ல நேரிடுமானால், வார்டனின் உத்தரவு பெற்றுச் செல்லவேண்டும் என்பது விதி. சுமார் 10-மணிக்கு நாங்கள் படுத்துக்கொண்டோம்.

அடுத்த நாள் காலை அண்ணாமலை நகரைச் சுற்றிப் பார்வையிடப் புறப்பட்டேன். மாணவர் விடுதிகள், சாப்பாட்டு விடுதிகள், ஆஸ்பத்திரி, மருந்துச்சாலை, தாவர நூலாய்ச்சிக் குரிய பல அபூர்வமான செடிகளும் மரங்களும் பயிராகும் நந்தவனம், மாணவர் கழகக் கட்டடம், கீழ்ப்புறத்தில் வரிசையாக நிற்கும் பேராசிரியர்களின் விடுதிகள், தபால் தந்தி ஆபீசுகளின் கட்டிடம், திருவெக்களம் கோயில், குளம் ஆகிய யாவற்றையும் பார்வையிட்டேன். பின்பு, இரண்டொரு மாணவிகள் எனக்கு அறிமுகமானார்கள். அவர்கள் தங்கள் விடுதியைச் சுற்றிக் காட்டினார்கள். தமிழ்நாடு,

*தமிழ் நாட்டுக் கென்றே தனிப் பெருமையோடு அமைந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நேரிலே போய்க் கண்ட ஒருவர் அதை வர்ணிக்கிறார். அது நிறுவியுள்ள நகரின் அழகையும், கழகத்தின் சிறப்புகளையும் விவரிக்கும் அவர், ஒன்றிரு குறைகளையும் குறிப்பிடுகிறார். அதிகாரிகள் கவனிப்பார்களா?*

ஆந்திரதேசம், மலையாளம் ஆகிய பல நாடுகளிலிருந்தும் பல கலைகளைப் பயில வந்துள்ள பல இன மாணவிகள் அங்கே யாதொரு வித்தியாசமும் பாராட்டாமல் ஒரே குடும்பத்தினரைப் போல் ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகிறார்கள்.

பிறகு, சங்கீத கலாசாலையைப் போய்க் கண்டேன். மிக அழகாக நிர்மாணிக்கப் பட்டுள்ள கலாசாலைக் கட்டிட வாயிலின் ஒரு புறத்தில் தியாகையரின் உருவச் சிலையும், மற்றொரு புறத்தில் புரந்தரதாசரின் உருவச் சிலையும் அமைக்கப்பட் டிருப்பதை பார்த்தேன். உள்ளே நுழைந்து இசை மன்றத்தைப் பார்வையிட்டேன். அது அலங்கோலமாகக் கிடந்தது. முந்தியநாள் நடந்த சங்கீத விழாவின்போது இசை பாடிய வித்வான்கள் குறித்த மொழியில் பாடவேண்டுமென்று பல மாணவர்கள் குறுக்கிட்டுக் கலகம் விளைத்துத் தங்களுக்குள் அடிதடிகள் பரிமாறிக் கொண்டார்களென்றும், அலங்காரமாக வைக்கப்பட்டிருந்த பல பூஞ்சாடிகள் முதலியன அந்தக் குழப்பத்தில் உடைந்தனவென்றும் சொன்னார்கள். பின்னர், வகுப்புக்கள் நடக்கும் அறைகளைப் பார்த்தேன். அவை யாவும் நவீன முறையில் ஒலி சாஸ்திர முறைகளின்படியும் பல சௌகரியங்களுடனும் நன்கமைந்திருந்தன.

பின், புத்தகாலயத்தில் புகுந்தேன். அங்கே 60,000 புத்தகங்களுக்குமேல் இருக்கின்றன. யாவும் எடுத்துப் பார்ப்பதற்குச் சௌகரியமாகத் திறந்த அலமாரிகளில் அடுக்கப்பட் டிருக்கின்றன. ஒரு புறத்தில் வரிசையாகப் பல அலமாரிகளில் வெகு நீளம் வரையில் தமிழ் நூல்கள் வைக்கப்பட்டுள்ளன. இது வரையிலும் அச்சாகியுள்ள தமிழ் நூல்கள் பலவும் அங்கே இருக்கின்றன. தமிழில் அவ்வளவு நூல்கள் இருப்பதைக் கண்டு உள்ளம் பூரித்துப் போனேன்.

விஞ்ஞான சோதனைக் கூடத்துக்குள் நுழைந்தேன். சோதனைக்குரிய பொருள்கள் சாதனங்கள் ஆகிய யாவும் அங்கே ஏராளமாக இருக்கின்றன. அவ்வளவு வசதிகளுடன் கூடிய சோதனைக் கூடங்கள் இந்தியாவில் வெகு சிலவே உண்டு என்று அறியலானேன். இவ்விடத்தில் மாணவர் ஒருவர், மாங்காயின் புளிப்பைப் பகுத்து ஆராய்ந்து கொண்டிருந்தார். பின்பு, சோதனைகள் நடத்தும்போதும் மற்றும் இதர சமயங்களிலும் தற்செயலாக உடைந்துபோன கண்ணாடிகள், சீசாக்கள், குழாய்கள், ஜாடிகள் முதலிய மிக நுண்மையான, விலையுயர்ந்த பொருள்களை மீண்டும் ஒட்டவைத்து உபயோகத்துக்குரியவையாகச் செய்வதில் தேர்ச்சிபெற்ற சோதனைக்கூட சிப்பந்தி யொருவரைக் கண்டேன். அவர் அவ்விதம் ஒட்ட வைத்த சில பொருள்களை எனக்குக் காட்டினார்கள். பூமி சாஸ்திர ஆராய்ச்சிக்குரிய பல ரகமான கற்கள் உலோகங்கள் முதலிய அபூர்வமான சேகரிப்புப் பொருள்களையும் கண்டேன்.

தாவரவர்க்கம், பிராணிவர்க்கம் ஆகியவை பற்றிப் பல விஷயங்களை அறிந்து கொள்வதற்குரிய காட்சிப் பொருள்களைச் சேகரித்து வைக்கப்பட்டுள்ள பகுதியில் நுழைந்தேன். வான், நிலம், நீர் ஆகிய மூவிடங்களிலும் வாழும் பிராணிகளின் சடலங்கள், எலும்புக்கூடுகள்

முதலியவை அழியாமல் அங்கே பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தச் சோதனைக் கூடங்களிலும் காட்சிச் சாலைகளிலும் சுமார் மூன்று மணி நேரம் கழித்தேன். இந்தப் பகுதிகளே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் மிகச் சிறந்த பகுதிகள் என்பது என் அபிப்பிராயமாகும்.

இடைவேளை உணவுக்குப் பின், பல்கலைக் கழக விளையாட்டு மைதானம், உடற்பயிற்சி, விளையாட்டுக்கள் இவைகளுக்குரிய விடுதிகள், வடபாரிசத்தில் மாணவர்கள் தோணிகள் ஓட்டுவதற்காக வெட்டப்பட்ட நீண்ட வாய்க்கால், தோணித்துறை, அழகிய தோணிகள் ஆகியவைகளைப் பார்வையிட்டேன்.

மாலையில் அண்ணாமலை நகரம் கலகலப்பாயிருந்தது. நகர ரஸ்தாக்களில் எங்கும் மாணவர், ஆசிரியர், சிப்பந்திகள் ஆகிய அனைவரும் கும்பல் கும்பலாக நடமாடினார்கள். ரேடியோ இசை முழங்கிற்று. மாணவர்கள் ரேடியோவைச் சுற்றியுள்ள புல் தரையிலும், மரத்தடியிலும்-மரங்களின் மீதும்கூட - இருந்து இசையின்பம் அனுபவித்தார்கள். மாணவிகள் பலநிறச் சேலைகள் அணிந்தும், நகரின் நந்தவனத்தில் பூத்த மலர்களைப் பறித்துக் கூந்தலில் சூட்டியும் வனதேவதைகளைப்போல் அங்குமிங்கும் உல்லாசமாக உலாவினார்கள். ஆசிரியர்களில் சிலர், தம் மனைவி குழந்தைகளுடன் உலாவச் சென்றார்கள். எங்கும் குதூகலம்; எங்கும் இன்ப வாழ்க்கையின் ஆரவாரம்.

அடுத்த நாள், மீண்டும் அண்ணாமலை நகரை வலம்செய்து, முந்திய நாள் விட்டுப்போன சில இடங்களைப் பார்வையிட்டேன். பல்கலைக் கழகக் கட்டிடங்களின் மத்தியிலே உள்ள தர்க்கா (முகம்மதியப் பெரியார் ஒருவரின் சமாதி) அவற்றில் ஒன்று. வருஷத்துக்கொருமுறை முகம்மதியர் அங்கே தாராளமாக வரவும், விழாக் கொண்டாடவும் உரிமை பெற்றிருக்கிறார்கள்.

மாலையில் சாஸ்திரியார் மண்டபத்துக்குள் நுழைந்தேன். அது மிகவும் அழகாக அமைக்கப்பட்டதொரு பெரிய மண்டபமாகும். பெண்களுக்கென்றும், அதிதிகளுக்கென்றும் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. விசாலமான மேடையின் நடுவே, பல்கலைக் கழக ஸ்தாபகரான ஸர் அண்ணாமலைச் செட்டியாரின் எண்ணெய் வர்ண உருவப் படம் ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. மேடையின் ஒரு புறத்தில் தில்லை நடராஜனின் சிலையும், மற்றொரு புறத்தில் கோவிந்தராஜனின் சிலையும் இருக்கின்றன.

அண்ணாமலை நகரம் அழகு நிரம்பிய ஒரு சிறு நகரம். பல்கலைக் கழக வாழ்வுக்குத் தேவையான யாவும் அதற்குள்ளேயே நன்கு அமைந்திருக்கின்றன. நகரிலுள்ள அழகான கட்டிடங்களும், சுற்றிலுமுள்ள செடிகள், மரங்கள், நந்தவனங்கள், பொழில்கள், குளங்கள், வயல்கள் ஆகிய யாவும் கண்களுக்குக் குளுமையும் உள்ளத்துக்கு இன்பமும் அளிக்கின்றன. இளைஞர்களின் சிந்தனைகளைக் கிளரியும், அவர்களின் மனத்தைப் பண்படுத்தியும், பல கலைகளை வளர்த்தும் வரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகம், இவ்வாறு இயற்கை அழகுகள் நிரம்பிய சுற்றுப் புறங்களுடன் விளங்கும் அழகிய அண்ணாமலை நகரில் அமைந்திருக்கிறது.

இத்தகைய அழகு வாய்ந்த அண்ணாமலை நகரமும் அதில் திகழும் பல்லைக் கழகமும் ஏற்படுவதற்கு உதவிய ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களைத் தமிழ் மக்கள் வாயார வாழ்த்தவேண்டும். வருங்காலத்தில் அண்ணாமலைப் பல்லைக் கழகத்தின் அலுவல்கள் மேன்மேலும் விரிவடையும். வள்ளல் அழகப்ப செட்டியார் தொழில் கல்விக்காக அளித்த பெருந் தனத்தைக் கொண்டு உயர்தரத் தொழில் கல்விக் குரிய அமைப்புக்களும் கட்டிடங்களும் சீக்கிரத்தில் ஏற்படப்போகின்றன. தமிழரனைவரும் அண்ணாமலைப் பல்லைக் கழகத்தின் மீது அன்பு செலுத்தி அதன் வளர்ச்சியில் பங்கெடுத்துக்கொள்ள முன் வரவேண்டும். அண்ணாமலைப் பல்லைக் கழகமும் அண்ணாமலை நகரமும் நீடூழி வாழ்க!

இந்தப் பல்லைக் கழகத்தின் அபிவிருத்தியில் நாட்டங் கொண்டவன் என்னும் முறையில், இதில் நான் கண்டதும் கேட்டதுமாகிய சில குறைகளைப்பற்றி இங்கே சில வார்த்தைகள் கூறவும், எனக்குத் தோன்றிய சில யோசனைகளைச் சொல்லவும் விரும்புகிறேன். அண்ணாமலை நகரில் நான் தங்கிய காலத்தில், மாணவரிடையே நெருங்கிப் பழகவும் பேசவும் நேர்ந்தது. அப்போது அவர்களின் உள்ளத்தையும், சிறு கஷ்டங்களையும், பொதுவாக அவர்கள் பெறும் கல்விப் பயிற்சியையும் பற்றிச் சில விஷயங்கள் அறியலானேன். முதலாவது: கல்விப்பயிற்சி விஷயத்தில், சிறப்பாக ஆங்கிலமொழி இலக்கியம் இவை சம்பந்தப்பட்ட மட்டில், அண்ணாமலைப் பல்லைக் கழகத்தில் அளிக்கப்படும் கல்வி, சென்னைப் பல்லைக் கழகத்தின் கல்விக்குக் குறைவாக இருக்கிறது. ஆங்கில மொழியையும் இலக்கியத்தையும் தெளிவாக, சுவையோடு கற்பிப்பதற்குப் பல்லைக் கழகத்தில் இரண்டு அல்லது மூன்று ஆங்கிலேய ஆசிரியர்கள் இருப்பது நலம். நமது அண்ணாமலைப் பல்லைக் கழகத்தில் ஆங்கிலேய ஆசிரியர் ஒருவர் கூட இல்லாமலிருப்பது ஒரு குறையாகும்.

இரண்டாவதாக: மாணவர்களிடையே சமீப காலத்தில் அவ்வப்போது ஏற்பட்டுவந்த கொந்தளிப்புக்களையும் கலவரங்களையும் அடக்கப் பல்லைக்கழக அதிகாரிகளும் ஆசிரியர்களும் கையாண்ட முறைகளைப்பற்றி மாணவர்கள் மிகுந்த மனக்கசப்புடன் பேசினார்கள். இளைஞர்கள் எப்போதும் உணர்ச்சியும் உற்சாகமும் நிரம்பியவர்கள்; நாட்டுப் பற்றுடையவர்கள்; நாட்டிலேற்படும் இயக்கங்களும் கொந்தளிப்புக்களும் அவர்களைத் தொடாமல் போவதில்லை. அவைகளின் எதிரொலிகள் மாணவரின் இதயங்களில் எழுவது இயற்கை. அத்தகைய சந்தர்ப்பங்களில், ஆசிரியர்களும் அதிகாரிகளும் அவர்களைத் திறமையாகவும், புத்திசாலித்தனமாகவும், அனுதாபத்துடனும் வழிநடத்திச் செல்லவேண்டும். அண்ணாமலைப் பல்லைக்கழக ஆசிரியர்களும் அதிகாரிகளும் அவ்விதம் செய்யத் தவறியதாலேயே, மாணவர்கள் விரும்பத்தகாத முறையில் குழப்பஞ் செய்தார்கள் என்பது என் அபிப்பிராயம். நான் மாணவனா யிருந்த காலத்திலும் இத்தகைய குழப்பங்கள் தலை காட்டியதுண்டு. ஆனால், மாணவர்களின் உள்ளப்பாங்கை நன்கறிந்த ஸ்கின்னர் போன்ற பேராசிரியர்கள், அவர்களை அனுதாபத்துடனும் சாதுரியமாகவும் வழி நடத்திச் சென்று சரியான

பாதையில் திருப்பினார்கள். விட்டுக் கொடுக்கவேண்டிய சமயங்களில் அவர்கள் விட்டுக் கொடுப்பார்கள்; உணர்ச்சியின் வேகம் குறைந்த பின், மாணவரின் பூரண அன்பையும் நம்பிக்கையையும் பெற்ற பின், ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் வலியுறுத்துவார்கள். சென்னைச் சட்ட கலாசாலையில் பிரின்ஸிபால் ஆர்த்தர் டேவிஸ் அவர்களும் அவ்வண்ணமாகவே நடந்துகொண்டார்.

துரதிருஷ்டவசமாக, இந்நாட்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், மாணவரின் அன்பையும் பூரண நம்பிக்கையையும் பெற்றுச் சாதுரியமாக அவர்களை வழிநடத்திச் செல்லத் தவறிவிட்டார்கள். அதனாலேயே மாணவர்கள் அத்து மீறினார்கள். அதிகாரிகள், போலீசாரின் உதவியை நாடவேண்டியிருந்தது. நான் சென்றிருந்தபோது ரிசர்வு போலீசார் அண்ணாமலை நகரில் முகாம் போட்டிருந்தார்கள். இந்த நிலை சற்றும் விரும்பத்தக்கதல்ல.

மாணவர்-ஆசிரியர்களிடையே எழுந்துள்ள அவநம்பிக்கை நீங்கவேண்டும். இரு சாராரிடையேயும் பரஸ்பர அன்பும் நம்பிக்கையும் நல்லெண்ணமும் வளரவேண்டும். மாணவர்களுடன் ஆசிரியர்கள் எவ்விதம் பழகுவது என்பதே ஒரு கலையாகும். நான் படித்தபோது, கிறிஸ்தவ கலாசாலை ஆசிரியர்கள், இந்தக் கலையில் கை தேர்ந்தவர்களாக இருந்ததைக் கண்டேன். கல்வித் துறையில் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் அடையும் வெற்றிக்கு இதுவே காரணமாகும். ஒரு சிறு நகரமாகிய அண்ணாமலை நகரில் அமைந்துள்ள பல்லைக் கழகத்தில், மாணவர்களும் ஆசிரியர்களும் ஒருங்கே வசிக்கும் இடத்தில் இத்தகைய பரஸ்பர அன்பையும் நம்பிக்கையையும் வளர்ப்பது மிக எளிதாகும். மாணவரின் உள்ளத்தையும் மனோ நிலையையும் அறியும் ஆற்றலும் அனுபவமுமே தேவை. பல்லைக்கழக ஆசிரியர்களோ அதிகாரிகளோ, மாணவரிடையே தேசீய உணர்ச்சி தோன்றுவதைக் கண்டு அஞ்சலாகாது. மாணவர்கள் நேரடியான அரசியல் துறையில் இறங்காத வரையில், தேசீய உணர்ச்சிக்கு அணைபோட முயல்வது அசட்டுத் தனமாகும். அந்த முயற்சியால் விபரீதங்களே உண்டாகும்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நாளுக்கு நாள் விருத்தியடைந்து வருகிறது; அதன் பொறுப்புக்களும் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. அதிகாரிகளுக்கும் ஆசிரியர்களுக்கும் அவைகளைச் சமாளிக்கும் அறிவும் திறனும் வேண்டும். தமிழ்ப் பெருமக்கள் அண்ணாமலை நகருக்கு விஜயம் செய்து, நிலைமையை நன்காராய்ந்து பல்கலைக் கழக அதிகாரிகளுடன் அளவளாவுவதும், அதன் விவகாரங்கள் செம்மைப்பட இயன்ற உதவி செய்வதும் நலமாகும். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தமிழர்களின் ஆர்வத்துக்கு ஒரு புறச் சின்னமாக விளங்குகிறது. அது அவர்களின் பொதுச் சொத்தாகும். தமிழ் மக்கள் அதனிடமிருந்து பல பெரிய விஷயங்களை எதிர்பார்க்கிறார்கள். ஆதலால், தமிழரனைவரும் அதில் அக்கறை கொள்வது இன்றியமையாததாகும்.



# பரமபதத்து எல்லை

டி. கே. சிதம்பரநாத முதலியார்

பள்ளிக்கூடப் பாடமாக, பூமி சாஸ்திரத்தைப் படித்தோம். பரீக்ஷையில் விடை எழுதினோம். அது காரணமாக இந்தப் பூமியிலுள்ள விஷயமெல்லாமே வெறுப்பாய்ப் போய்விட்டன. இமய பர்வதத்தைச் சேர்ந்த கயிலையங்கிரியின் உச்சியில் நம்மைக் கொண்டு வைத்து, 'இதுதான் கயிலையங்கிரியின் உச்சி' என்று சொன்னால், "சரிதான். பூமி சாஸ்திரத்தில் இதைப்பற்றிப் படித்திருக்கிறேன். அடடா, இதன் உயரம் எத்தனை அடி என்பது மறந்து போய்விட்டதே!" என்று நெற்றியைத் தடவத் தோன்றும். அதிசயமோ ஆனந்தமோ நெஞ்சில் பிறக்க விடாது. எல்லாம் பாடம் படித்த காரணமாகத்தான்.

இப்படிப் பாடம் படித்த ஒரு மாணவனுக்கு, ஆழ்வார் திருநகரியை முதல் முதலாக வந்து பார்த்தால், அதிசயம் என்னமாவது உண்டாகுமா? உண்டாகவே உண்டாகாது. உள்ளத்தில் ஆனந்தம் பிறப்பதற்கு வசதியே கிடையாது. பூமி சாஸ்திரப் பாடத்தை ஒட்டி ஒட்டி உள்ளம் ஒரு சகாராப் பாலைவனமாக ஆய் விட்டது. இது போகட்டும்.

* * *

சுமார் அறுநூறு வருஷங்களுக்குமுன் நம்மவர் ஒருவர்; பூமி சாஸ்திரப் பாடங்கள் ஒன்றையும் படியாதவர்; காஞ்சிபுரத்துக்குப் பக்கத்திலுள்ளவர். அவரது அநுபவம் ஒன்றைப் பார்க்கலாம்.

வட மொழியிலுள்ள வேதங்கள் சாஸ்திரங்கள் எல்லாவற்றையும் கசடறக் கற்றவர் அவர். பக்தி நூல்களை யெல்லாம் பார்த்தவர். அவர் ஆராயாத வைஷ்ணவ சம்பந்தமான வடமொழி நூல்கள் கிடையாது. வடநாட்டு சமயக் கலை யெல்லாம் ஓடி வந்து அவர் இதயத்தில் பெருகியது என்று சொல்லலாம்.

இப்படிப்பட்டவர் ஈடுபட்டுத் தமிழைக் கற்க ஆரம்பித்தார். நம்மாழ்வாருடைய பாசுரங்களைப் பார்த்தார். சமய உண்மைகள் வெகு தெளிவாய் அவைகளில் கிடக்கக் கண்டார். தத்துவங்கள் தமிழில் எவ்வளவு எளிதாக வெளியாகின்றன என்பதைக் கண்டு அதிசயித்தார். நம்மாழ்வாரது இதயம் தத்துவ உண்மையில் எப்படித் திளைத்துக் கிடக்கிறது என்பதையும் கண்டு ஒரே பக்தியில் மூழ்கிவிட்டார்.

இப்படி மூழ்கியவருக்கு உள்ளத்தில் ஒரு பேராசை எழுந்

மகான்களை நினைக்கும் போது, நம் உள்ளம், நம்மை அறியாமலே, கட்டற்ற பூரிப் பொன்றை அடைகிறது. அதை நம்மால் வாய் திறந்து சொல்லத் தெரிவதில்லை. ஆனால், உள்ளப் பண்பாடு நிறைந்த மற்றொரு மகான் அதைச் சொல்லி விடுகிறார். கனிந்த கவிதையிலே, நம்மாழ்வாரை, ராமானுஜன் புகழும் ஒரு பாட்டு அது.

தது; நம்மாழ்வார் பிறந்த இடமாகிய ஆழ்வார் திருநகரியைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசைதான். நானூறு மைல் பிரயாணம் செய்து ஆழ்வார் திருநகரியின் (குருகூர்) பக்கமே வந்துவிட்டார். ஒரு பக்கத்தில், நம்மாழ்வார் எழுந்தருளி யிருக்கும் கோயிலின் திருமதிலைக் கண்டார். அதை யொட்டிப் பக்கத்தில் தெள்ளத் தெளிந்து தாம்பிரவர்ணி (பொருநை) ஓடுவதையுங் கண்டார். நம்மாழ்வார் கண்டு அனுபவித்த கடவுள் தத்துவம் அப்படியே வந்து பக்தரது உள்ளத்தை நிறைத்து விட்டது. அந்த நிலையில் அவரது அதிசயமும் ஆனந்தமும் தமிழாய் வெளி வருகிறது.

ராமானுஜர் தான் அந்த பக்தர். அவரது அனுபவத்தை இப்போது பார்க்கலாம்:

இதுவோ திருநகரி,
   ஈதோ பொருநை,
இதுவோ பரமபதத்(து)
   எல்லை — இதுவோ தான்
வேதம் பகர்ந்திட்ட
   மெய்ப்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன்
   ஊர்?

உண்மையான அனுபவம் இது. தமிழ் வார்த்தைகள் இதயத்திலுள்ள உணர்ச்சி அம்சங்களை ஆங்காங்குச் சுட்டிக் காட்டுகின்றன. ராமானுஜரது இதயப் பண்போடு ஒட்டி, வெண்பாவைத் திரும்பத் திரும்பப் பாடுவோமேயானால், உணர்ச்சி ஆழம் தெளிவாகும்.



## ஐ. ஸி. எஸ். செலவு

"இந்தியாவில் ஒரு வருஷத்தில் ஐ, ஸி. எஸ். அதிகாரிகளால் 2 கோடியே 50 லட்ச ரூபாய் (18 லட்சத்து 50 ஆயிரம் பவுன்) செலவு. மொத்த பட்ஜெட்டில் இது 1¼ சத விகிதம். ஜனத்தொகையில் 2 லட்சத்து 50 ஆயிரம் பேருக்கு ஒருவர் விகிதமும், நிலப்பரப்பில் 868 சதுர மைலுக்கு ஒருவர் விகிதமும் ஐ, ஸி. எஸ் அதிகாரிகள் இருக்கிறார்கள்.

"உலகத்திலேயே மகா சக்தி ஒரே மனிதன் கையில் திரண்டிருக்கக் கூடிய பதவி வகிப்போரில், இந்திய வைஸிராயும் நிச்சயமாய் ஒருவராவார். அவர் கைக்குள் (லண்டனில் உள்ள இந்தியா மந்திரி காரியாலயத்தோடு சேர்ந்து தான்) மனித ஜாதியில் ஐந்திலொரு பங்கு மக்களின் தலைவிதி அடங்கி யிருக்கிறது."

— ஜான் கந்தர்

## எதிரி விமானத்தைச் சுட்டு வீழ்த்த

எதிரி விமானத்தைச் சுட்டு வீழ்த்த, பின்வரும் நாலே நாலு சங்கதிகள் தான் முக்கியம் என்று, ஓர் ஆங்கிலப் பத்திரிகை கூறுகிறது:

படி 1: சட்டென்று பார். (தூங்கிக் கொண்டிராதே.)

படி 2: சட்டென்று கண்டு கொள். (நமது விமானம் மாதிரி இருக்கிறது என்று ஏமாறுதே.)

படி 3: சட்டென்று சண்டையிடு. ('நான் கிளம்பு முன்னே அது போய்விட்டதே' என்று உளருதே.)

படி 4: சுடு. ('அது என் பீரங்கிக்கு வேறு பக்கமாய் வந்தது; மிகத் தாழ வந்து தந்திரங்கள் செய்தது' என்றெல்லாம் சாக்குச் சொல்லாதே.)

சக்தி

# பித்தளை வளையல்

கு. அழகிரிசாமி

அவளுடைய உள்ளம் நைந்து போன ஒரு கந்தை. அது மாறி மாறி நைந்து 'பிசிந்து' கொண்டே இருக்கும். அதற்கு மாறி மாறி ஒட்டுப்போட்டுத் தன் வறுமை வாழ்வு அம்பலத்துக்கு வந்து விடாமல் மூடிக் கொண்டே வந்தாள். ஆனால், எவ்வளவு காலம்தான் இது சாத்தியப்படும்? சொர சொரப்பான வாழ்க்கைப்பாறையில், அதை மறுபடியும் மறுபடியும் அறையவே, கடைசியில் சிதைந்து போகும் நிலைக்கு அது வந்துவிட்டது.

ஏதாவது ஒரு விஷயத்தில் எப்படியோ துணிந்து ஒரு தீர்மானத்துக்கு வருவாள். அப்புறம் 'இயலாத பொறுமை'யைக் காட்டும் தன் தீர்மானத்தில் புதைந்து கிடக்கும் வறுமையின் கோரத்தை உணரும்போது, அவளுடைய உள்ளத் துகில் பின்னும் அதிகமாகக் கிழிந்துவிடும். இப்படி அவளது உள்ளத்தைத் துன்புறுத்திய சம்பவங்கள் பல. அதில் இந்தப் பித்தளை வளையல் விஷயமும் ஒன்று.

அவள் பெயர் கோமதி. அவளுடைய கணவன்-சுப்பிரமணியன் - சப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் மாதம் முப்பத்தைந்து ரூபாய் சம்பளத்தில் வேலை பார்க்கும் ஒரு குமாஸ்தா. அவள் பிறந்த வீடும், புகுந்த வீடும் ஒரேமாதிரி வறுமை நிலையில் இருந்தன. எப்படியோ அவளைக் கொஞ்சம் படிக்க வைத்திருந்தார்கள்.

அன்று "கோமதி! .........." என்று அழைத்துக்கொண்டே வந்து, வாசற் கதவைத் தட்டினான் சுப்பிரமணியன். அவளும் வந்து கதவைத் திறந்தாள்.

"சமையல் ஆகி விட்டதா?" என்று அவசரமாகக் கேட்டான் சுப்பிரமணியன்.

"ஆகிவிட்டது. ரொம்ப அவசரம் போல் கேட்கிறீர்களே; என்ன விசேஷம்?"

"என்ன, இன்றைக்கு ஒரு மணிக்கு சப் ரிஜிஸ்தரார் மகளுக்கு விவாகம் இல்லையா?"

"அதற்கென்ன? இன்னும் இரண்டு மணிநேரம் இருக்கிறது; சாவகாசமாய்ச் சாப்பிட்டுப் போகலாமே!" என்று சொல்லிவிட்டு, சமையல் கட்டுக்குள் போய்விட்டாள் கோமதி.

அவளுடைய முகத்தில்தான் எவ்வளவு அழகான புன்னகை! கோமதி ஏழைப் பெண்தான்; என்றாலும் நல்ல அழகி. சந்தனத்தை அரைத்துச் செய்தமாதிரி பொன் மேனி; கடைந்தெடுத்தது போன்ற கை கால்கள். அவ

---

*அவள் தங்கப் பதுமை போன்றவள். ஆயினும், லட்சுமி கடாட்சம் இல்லையே! நாலு பேருக்கு நடுவே, வெறுங்கையாய்ப் போகலாமா? பித்தளை வளையலோடு செல்கிறாள். அந்தப் பணத்திமிர் பிடித்த கரிமூஞ்சிக்குத் தான் என்ன துடுக்கு? ஐயோ! இந்த நைந்த உள்ளத்தை அவள் என்ன பாடுபடுத்தி விட்டாள்!*

ளுடைய அழகிலும் புன்சிரிப்பிலும் ஈடுபட்டு இன்ப பரவசத்தில் நிற்கும் சுப்பிரமணியனின் மனதில் திடீரென்று ஒரு சோக சரம் பாய்ந்தது. அவளுடைய அழகுக்கு உயர்ந்த ஆடையாபரணங்களைப் பூட்டிப் பார்த்தால், எவ்வளவு நன்ருக இருக்கும் என்று கற்பனை செய்து பார்த்தான். கடைசியில் தன் இயலாத வறுமை வாழ்வை நினைத்துப் பெருமூச்செறிந்துவிட்டு, கோமதியினிடம் சென்ருன். அவளிடம் "கோமதி! நீ இன்றைக்கு அங்கே போகும்போது ஏன் வெறுங் கையாகப் போகவேண்டும்? அந்த வளையலை எடுத்துப் போட்டுக் கொள்ளேன்" என்று, துயரமும் வேண்டுதலும் நிறைந்த பார்வையோடு, சிரித்துக்கொண்டே சொன்ஞன் சுப்பிரமணியன்.

"உம்! அதற்கென்ன! வாங்கினது சாமி கும்பிடுவதற்கா? நானே போட்டுக்கொள்ளலாம் என்றுதான் இருந்தேன்" என்று, மனதில் ஒன்றும் தோன்ருதவள் மாதிரி சாவதானமாகச் சொன்ஞள்.

இது சுப்பிரமணியனுக்குச் சற்று ஆறுதலாக இருந்தது. தங்கள் குடித்தனத்தைத் தரித்திரம் பிடித்து ஆட்டிவைக்கும் கழுத்துப் பிடியான காலங்களில் எல்லாம், இந்த இரண்டு பச்சிளம் ஜீவன்களும் ஒருமிக்க உட்கார்ந்து வறுமையின் சிக்கலைத் தீர்க்கத் திகைப்பும் கண்ணீருமாக யோசித்த சமயங்கள் எத்தனையோ உண்டு. ஒருவர் மனம் கசங்கினல் மற்ருெருவர் தேற்றுவது வழக்கம். அதனுல், அன்று தன் கணவனின் மன வாட்டத்தைக் கண்டு, தான் ஒன்றும் வருந்தாதவள்போல், அலட்சியமாகப் பேசித் தேறுதல் அளித்தாள் கோமதி.

அன்றைக்குப் பத்து நாட்களுக்கு முன்னுல் வடநாட்டு வியாபாரி ஒருவன், பொன்முலாம் பூசி அற்புத வேலைப்பாடுகள் அமைந்த பல பித்தளை நகைகளைக்கொண்டு வந்திருந்தான். அதில் நல்ல தரமாக இருந்த வளையல்களைப் பொறுக்கி, கைக்கு மூன்ருக ஆறு வளையல்களைக் கோமதி விலைக்கு வாங்கிக் கொண்டாள். அந்த வளையல்களின் தங்கப் பிரகாசம் நான்கு வருஷங்களுக்கு மங்காமல் இருக்கும் என்று அந்த வியாபாரி 'காரண்டி' அளித்தான். பிறகு மங்கிவிட்டால் மறுபடியும் கொஞ்சம் செலவுசெய்து பொன்முலாம் பூசிக்கொள்ளலாம். அந்த வளையல்களைத்தான் அணிந்து கொள்ளச் சொன்ஞன் சுப்பிரமணியன்.

கோமதி சிறு குழந்தையாக இருந்தபோது கண்ணுடி வளையல்களையும் ரப்பர்க் காப்புகளையும் அணிந்ததைத் தவிர, அவடைய கரங்கள் பொன் வளையல்களை ஆசைக்குக்கூடக் கொஞ்ச நேரம் போட்டுப் பார்த்ததில்லை. முதல்முதலாக, அன்று வாங்கிய பித்தளை வளையல்களை அணிய அவளுக்கு வெட்கமாக இருந்தது. என்றுமில்லாதவாறு அவள் அணிந்தால், அடுத்த வீட்டுப் பெண்கள் அவைகளைப் பற்றிக் கேட்கும்போது, அவற்றைப் பித்தளை வளையல்கள் அல்ல என்று மறுக்கமுடியுமா? ஆகவே, அதை ஏன் வாங்கினேம் என்றுகூட அவளுக்கு ஆகிவிட்டது.

தன் கணவனின் மனத்திருப்திக்காக அவற்றைப் போட்டுக் கொள்ளலாம் என்று முதலில் நினைத்தாள். அப்புறம் அவளுடையமனம்என்னவெல்லாமோ எண்ண ஆரம்பித்தது. மனிதனுடைய வாழ்வைத் தேவையும் அவசியமும் வந்து பாதித்துத்

தூண்டும்போது, அவனுடைய கற்பனையும் புத்தியும் விசாலிப்பது இயற்கைதானே! அவள் பித்தளை நகை அணிவதால் என்ன கேவலம் என்று ஆராயத் தலைப்பட்டாள். நகை அணிவது புற அழகுக்குத்தானே! ஆகவே, பொன்னை அணிந்தால் என்ன, அல்லது பொன்னைப்போன்ற வேறொன்றை அணிந்து கொண்டால் என்ன? வெளிப் பார்வைக்கு இவையிரண்டும் ஒன்றுதானே? மூலாம் மங்கிவிட்டால், மறுபடியும் பூசிக் கொள்ளுகிறது? அழகுக்காகத் தான் நகையே தவிர, அந்த நகையின் மதிப்பில் என்ன இருக்கிறது? இப்படி எல்லாம் அவளது உள்ளம் எங்கோ ஒரு மூலையில் மறைந்துகிடந்த உண்மையை வெளிக்கொணர்ந்து, அலசி அலசி ஆராய்ந்து, தன் கொள்கையை நிலைநாட்ட முயற்சித்தது. அப்போது அவளுக்கு உதயமான அந்த உண்மை, அவளுடைய மனக்கந்தையின் தொய்வைப் போக்கி அதை உரம்படச் செய்தது.

அவள் எண்ணமிட்டதென்னவோ உண்மைதான். உலகத்தில் சாரமும், அர்த்தமும் இல்லாமல் வெளிப்பார்வையின் திருப்திக்காக மட்டுமே நடைபெறும் எத்தனையோ பொய்க் காரியங்களை, சமூகம் தெரிந்தும் கௌரவிக்கிறது. ஆனால், ஏழைக் கோமதியின் வாதத்தைச் சமூகம் ஏற்றுக்கொள்ளுமா?

சப் ரிஜிஸ்திரார் மகளின் மண விசேஷத்துக்காக அவரது வீட்டுக்கு வந்தவர்களில் அநேகம்பேர், பெரிய உத்தியோகஸ்தர்களின் குடும்பங்களைச் சேர்ந்தவர். ஒவ்வோர் உத்தியோகஸ்தனின் மனைவியும் விலையுயர்ந்த வைர நகைகளை அணிந்திருந்தாள். அவர்கள் எல்லாம் குதூகலமாக நடமாடிக் கொண்டிருந்தார்கள். ஆனால், கோமதிக்கு அந்த வைபவத்தில் கலந்து கொள்ள, எங்கே மனம் செல்லும்? அங்கே வந்த எல்லாப் பெண்களுடைய கைகளையும் கவனித்தாள். அவள் 'கட்சி'யில் சேருவதற்கு அங்கே எவரும் இல்லை. எல்லோர் கையிலும் வித விதமான பொன் வளையல்கள்! சிலருடைய கைகள் அந்தங் கெட்டு அவலட்சணமாக இருந்தன. ஒரு ஸ்திரீயின் கைகளில் உண்மையாகக் குஷ்டம் இருந்தது. அவளும்தான் பொன் வளையல்கள் அணிந்திருந்தாள்! அதைக் கோமதி பார்த்தாள். தன் இளம் கைகளைக் கண்டு பெருமூச்சு விட்டாள்! 'குஷ்டம் பிடித்தவள் பொன் நகைகள் அணிவது கேவலமா? அல்லது மலர்க் கைகளோடு உள்ள ஓர் இளம் பெண் பித்தளை வளையல்களை அணிவது கேவலமா?'- இந்தக் கேள்வியும் அவள் மூளையில் புகுந்து அலைத்துக் கொண்டிருந்தது.

எங்கெல்லாம் செல்லுகிறது மனம்!

கோமதி தன் கைகளை மெதுவாக வீசவே கூசினாள். வளையலணிந்த கைகளின் வீச்சு எப்படி இருக்குமோ என்ற திகைப்பு! தன் வேஷத்தை யாரும் கண்டு பிடித்து விடுவார்களோ என்ற நிம்மதியற்ற கலவரம்! அவளுக்கு மடியிலே நெருப்புக் கட்டியது போல் இருந்தது. ஒவ்வொரு நிமிஷமும், தான் ஏதோ செய்யத் தகாத குற்றத்தைச் செய்து அகப்பட்டுக் கொண்ட மாதிரி அவளுடைய மனம் துடித்தது. அந்த வளையல்களை ஏன் போட்

டுக் கொண்டோம் என்று வருந்தினுள். அந்தச் சமயத்தில் சப் ரிஜிஸ்தரார் வீட்டு வேலைக்காரி ஒருத்தி அவளுக்கு முன்பாக எங்கோ சென்ருள். அவள் கைகள் வெறுங் கைகளாகவே இருந்தன. அவள் அதற்காக ஒன்றும் கவலைப்பட வில்லை! அவளுடைய மனச் சாந்தியைக் கண்டு கோமதி மனம் பொருமினுள்.

இந்த வேதனையே போதாதா? தெய்வத்துக்குச் செல்வமளிக்கத் தான் துப்பில்லை; ஏன் அவளை, இப்படிப் பழி வாங்க வேண்டும்? நாலு பணக்காரப் பெண்கள், கோமதியிடம் வம்பு பேச வந்து விட்டார்கள். அவளது அழகைக் கண்டு, அவர்களுடைய உள்ளத்திலே எழுந்த பொருமைத் தீயை ஆற்றிக் கொள்ள, தங்கள் தங்க வளையல்களையும் காசு மாலைகளையும் கிணுக்கிக் கொண்டே அவர்கள் பேசலானுர்கள்?

"ஏனடியம்மா? உன் வளையல்கள் எத்தனை பவுன்?" என்று கேட்டாள் ஒருத்தி.

கோமதியின் மனம் துடித்தது: "அது......அது.........பித்...அது மூன்று பவுன்" என்ருள் வாய் தடுமாறிய வண்ணம்.

அட்டைக்கரி போல் இருந்த இன்னெருத்தி, குறும்பாகச் சிரித்துக் கொண்டே, "பவுன் என்ருல் எப்படி இருக்கும், அம்மா?" என்ருள்.

கோமதியின் உள்ளத்திலே ஈட்டியால் குத்தியது போல் இருந்தது. வெறிச் சென்ற பார்வையுடன், தலை குனிந்தாள். அவளது பதிலை எதிர் பாராமலே அந்தப் பெண்களெல்லாம் 'கொல்' என்று நகைத்துப் பிரிந்தார்கள்.

எப்படியோ சடங்கு முடிவுற்றது.

கோமதி எல்லோருக்கும் முன்பாகப் புறப்பட்டு வீட்டை நோக்கி வந்தாள். தெரு வழியே வரும்போது அவள் மிகவும் சிரமப்பட்டுத்தான், தன் அழுகையை அடக்கிக் கொண்டு வந்தாள். வீட்டுக்கு வந்ததுதான் தாமதம்; கதவைப் பூட்டிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள். அழுகைக்கு எல்லை உண்டு, என்ருலும் துயரத்துக்கு எல்லை இல்லை என்னும்படி இருந்தது.

கடைசியில், கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, அந்தச் சனியன் பிடித்த வளையல்களைக் கழற்றி எறிந்தாள். தன் மன வருத்தம் தன் கணவனுக்குத் தெரியக் கூடாது என்று முகத்தை மலர வைத்துக் கொண்டு, சுப்பிரமணியத்தின் வருகைக்காகக் காத்திருந்தாள்.

சுப்பிரமணியனுக்கும் தன் வறுமையையும், கோமதியின் வளையலையும் பற்றிய சிந்தனைதான்.

நேராக வீட்டுக்கு வந்தவன் வந்ததும் கோமதியின் கைகளைத் தான் பார்த்தான். வளையல்களைக் காணவில்லை. அவளுடைய முகம், வாட்டத்தை மறைக்க முடியாமல் தவித்தது. பீறிக் கொண்டு வரும் அழுகையை நிறுத்திப் பெரு மூச்சு விட்டாள். சுப்பிரமணியன், "ஏன், கோமதி! வளையல் எங்கே?" என்று கேட்டான்.

"இருக்கிறது........" என்று 'சடக்'கென்று பதில் சொன்னுள்.

"எங்கே......காணும்?......"

"அந்தச் சனியன் பிடித்த வளையலைப் பற்றி மாறி மாறி ஏன் கேட்கிறீர்கள்?" என்று

அவன் முகத்தைப் பார்க்காமலே சொல்லி விட்டு நகர்ந்தாள்.

அவளைச் சிறிது பரிகாசம் செய்து அவளுடைய துயரத்தை மாற்ற நினைத்த சுப்பிரமணியன், "நீதானே அதைப் போட்டுக் கொள்வது பரவாயில்லை என்று வேதாந்தம் பேசினது? அதற்குள் என்ன நினைத்து விட்டாய்?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

அவனுடைய வார்த்தைகள் அவள் மனக் கசப்பையும் வேதனையையும் கிளறின. அவளுடைய கண்களில், நசுக்கிப் பிழிந்த மாதிரி நீர் பொங்கியது. கீழ் உதடு பட பட என்று துடித்தது. நீண்டதொரு பெரு மூச்சோடு பின்னால் திரும்பி, சுப்பிரமணியனை ஏறிட்டுப் பார்த்து விட்டுத் தலை குனிந்து கொண்டாள்.

"என்ன இது, கோமதி! என்ன?" என்று, அன்பு கனிய மீண்டும் கேட்டான் சுப்பிரமணியன்.

கோமதி தேம்பித் தேம்பி அழுத வண்ணம், நடந்ததை யெல்லாம் சொன்னாள்: "பவுன் என்றால் எப்படி யிருக்கும் என்று ஒரு கரிமூஞ்சி என்னைக் கேட்டாளே! அதுதான் என்னால் சகிக்கவே முடியவில்லை" என்று முடித்தாள்.

சுப்பிரமணியன் சற்றுத் திகைத்து நின்றான். பின்பு, புன்முறுவலுடன், கோமதியின் அருகே சென்று, அவளது தலை மயிரைப் பரிவுடன் கோதி விட்டுக் கொண்டே, "இவ்வளவு தானே? அதற்குப் பதில் கூற உனக்குத் தெரிய வில்லையா?" என்று சொல்லி, கோமதியின் மலர்க்கையை மெல்லத் தடவி, "இதோ பார், இந்தப் பொன் மேனி போல்தான் இருக்கும் என்று பதிலளிக்க வேண்டியது தானே!" என்றான்.

இரண்டு உள்ளங்களிலும் அப்போது அளவிறந்த வேதனை கிளர்ந்தது; அந்த வேதனைக் கடலின் நடுவே எழுந்த அமுதம் போல், இவ்விதமென்று சொல்ல முடியாத ஓர் இன்ப பரவசமும் பொங்கியது.





## வைஸிராய் துடுக்கு

ஸர் அஷுடோஷ் முகர்ஜி என்ற பிரபல ஹைகோர்ட் ஜட்ஜி, தம் தாயாரிடம் பெரும் பக்தி உடையவர். அவரை ஏதோ ஒரு விசேஷத்துக்கு வருமாறு, வைஸிராய் அழைத்தார். தம் தாயின் மத நம்பிக்கைக்கு அதுவிரோதமாகு மாகையால், தாம் வரமுடியாது என்று முகர்ஜி தெரிவித்தார்.

வைஸிராய்க்குக் கோபம் வந்து விட்டது. எரிச்சலோடு, "அவள் மகனை வரவேண்டுமென்று வைஸிராய் கட்டளை யிட்டிருக்கிறார் என்று உம் தாயிடம் சொல்லும்" என்றார் வைஸிராய்.

நட்சணமே எரிமலையின் குமுறலுடன் முகர்ஜியும் பதில் சொல்லி விட்டார். அவர் சொன்ன பதில் இது தான்; "அப்படி யானால், என் தாயின் சார்பாக, வைஸிராய் அவர்களுக்கு நான் ஒரு விஷயம் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதாவது: என் தாய் தன்னைத் தவிர வேறு யாரும்—அவர் வைஸிராயர் யிருந்தாலும் சரிதான்; அவரையும் விடப் பெரிய வேறு எவராக இருந்தாலும் சரிதான்—தன் மகனுக்குக் கட்டளை யிடுவதை என் தாய் மறுக்கிறாள்."



# கல் சொன்னகதை

— து. ரா.

கல்லால் செய்த சிலைதான். இருந்தாலும், அந்தக் கல் பேசும் கல்லாக இருந்தது. கலைஞன் கை பட்ட கல் அல்லவா?

"இவள் யாரோ? கண்வர் ஆச்ரமத்தில் இருக்கும் சகுந்தலையா? அல்லது, வற்கலை அணிந்து ராமனுடன் வனவாசம் செய்யும் சீதையா?" என்று நினைத்துக் கொண்டேன்.

அருகில், சற்று ஒதுங்கினாற் போல், புலித்தோலை ஆடையாக அணிந்து, கையில் வில்லுடன் ஜடாதரனாய் நின்ற ஈசுவரனையும், எதிரில் பத்மாசனத்தில் அமர்ந்திருந்த தவசியையும் பார்த்த பிறகு, உண்மை விளங்கிற்று. அர்ச்சுனனின் தவக் காட்சியை மனக்கண் முன் வருவித்து, கல்லுக்கு உயிரைக் கொடுத்து விட்டான் கலைஞன்.

ஆற்றங் கரையில், பிரமாண்டமான அந்த ஆலமரத்தின் கீழ் இந்த அபூர்வ சிற்பங்கள் கேட்பாரற்றுக் கிடந்தன. எப்போதாவது என்னைப்போல் கலைப் பித்தர்கள் வந்து பார்த்தால் உண்டு.

கையோடு கொண்டு வந்திருந்த காமிராவில் நான்கு படங்கள் எடுத்துக்கொண்டு திரும்பினேன்.

வழியில் ஒரு சிறிய கோவில். கோவிலை நெருங்கிய சமயத்தில் மழை பிடித்துக் கொண்டது. சீக்கிரத்தில் நிற்கிற மழையாய் இல்லாததால், கோவிலுக்குள் ஒதுங்கினேன். மழை பெய்து கொண்டே இருட்டி விட்டது. குளிரையும், பசியையும் பொறுத்துக் கொண்டு, உடலை ஒடுக்கி, தரையில் ஓர் ஓரமாய்ப் படுத்து விட்டேன். படுத்தேனோ இல்லையோ, அந்தக் கோவிலின் அர்ச்சகக் கிழவர் எதிரே வந்து நின்றார்.

"அந்த மரத்தடியில் உள்ள சிலைகள்—" என்று ஆரம்பித்தார். "தூக்கம் கண்ணைச் சொருகுகிறது. பெரிய கதையோ?" என்றேன். பதில் இல்லை. கிழவர் கதையைத் தொடங்கினார்:

1

வெகு காலத்துக்கு முன், இந்தப் பிரதேசத்தில் சச்சிதானந்தர் என்று ஒரு சுவாமியார் இருந்தார். சச்சிதானந்த மகாத்மா என்றும் அவரை அழைப்பதுண்டு. வயது முதிர்ந்தவர். அறிஞர். யோக சாதனையில் வல்ல

---

கலைஞன் உலகைத் துறக்கிறான்; ஆனால், கலையைத் துறக்க முடியுமா? அதுதான் முடியவில்லை. சிலைகள் தயாராகின்றன; ஜீவகளையும் பெறுகின்றன. ஆனால், அவனோ? அந்தச் சிலைகளின் அழகை அனுபவிக்கும் பாக்கியம் அவனுக்குண்டா?

வர். இங்கேதான் எங்கேயோ ஒரு குடிசை அமைத்துக் கொண்டு, அவர் வசித்து வந்தார். பழுத்த பழம் என்பார்களே, அப்படி இருக்குமாம் அவருடைய தோற்றம்.

நாள் தோறும், பொழுது புலரும் வேளையில், ஆற்றில் அவர் நீராடி விட்டுச் செல்லும்போது மட்டும் அவரைப் பார்க்க முடியும். மற்ற நேரங்களில் தம் குடிசையை விட்டு அவர் வெளிப்படுவதில்லை. உணவு முதலியவைகளுக்கு அவர் என்ன செய்தாரோ, ஒருவருக்கும் தெரியாது. பண்டைக் காலத்துத் தவசிகளைப் போல் கந்த மூல, பலாதிகளை உட்கொண்டு ஜீவித்துவந்தாரோ என்னவோ!

ஒரு தினம், சச்சிதானந்தர் வழக்கம் போல் ஆற்றில் நீராடிக் கொண்டிருக்கையில், இரண்டு நாட்களாய் இந்தக் கோயிலில் தங்கி யிருந்த வாலிப தேசாந்திரி ஒருவர் ஆற்றங் கரையில் இருந்தபடியே அவரைக் கவனித்தான். சன்யாசி கரையை அடைந்ததும், அவன் அவர் முன் சென்று, அவருடைய பாதங்களில் விழுந்து வணங்கி, "சுவாமி! என்னைத் தங்கள் சிஷ்யனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். தக்க குருநாதரைத் தேடிக் கொண்டுதான், தேச சஞ்சாரம் செய்து வருகிறேன். இன்றே என் இஷ்டம் சித்தி அடைந்தது. தங்களைத் தரிசித்தது முதல் என் மனதுக்குச் சாந்தி ஏற்பட்டு விட்டது" என்றான்.

சன்யாசி வியப்புற்று அவனை நோக்கினார். ரோமம் அடர்ந்திருந்த முகத்தில் இளமையும் அழகும் பிரகாசித்தன.

"குழந்தாய்! வயதினாலும், அனுபவ ஞானத்தினாலும் பரிபக்குவ மடைந்த மனமே துறவறத்துக்கு ஏற்றது. இல்லறத்திலிருந்து பக்தி மார்க்கத்தைக் கடைப்பிடி. அப்புறம் சன்யாசம் கொள்வதைக் குறித்துச் சிந்திக்கலாம்" என்று கூறிவிட்டு, மேலே செல்லத் தொடங்கினார்.

அந்தத் தேசாந்திரி அவரை விடாமல் பின் தொடர்ந்தான். "சுவாமி! இல்லறத்தில் விருப்பம் இல்லாமல், வெறுப்படைந்த மனதுக்குச் சாந்தி ஏற்படுவது எவ்வாறு? தங்களைக் கண்டது முதல் தங்களையே குருநாதராகப் பாவித்து விட்டேன். என்னைத் தள்ளக் கூடாது" என்றான்.

சச்சிதானந்தர் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அவன் கேட்கவில்லை. ஒரே பிடிவாதமாய் அவன் மனம் சன்யாசத்தையே நாடி நின்றது. வேறு வழியில்லாமல், சன்யாசி அவனைத் தம்முடனே வைத்துக் கொண்டார்.

அன்று முதல், பெரிய சுவாமியாரைப் பார்த்தவர்கள், நிழல் போல் அவருடன் ஒரு சின்னச் சுவாமியாரும் இருப்பதைக் கண்டார்கள். இந்த நித்யானந்த சுவாமியின் பெயரும் சீக்கிரத்தில் பிரபல மடைந்தது.

2

நாட்கள் சென்றன.

சரத் காலம். நகை யிழந்த முகம் போல், விருட்சங்கள் சருகு உதிர்ந்து மொட்டை மொட்டையாய் நின்றன. மருந்துக்காகிலும், பசுமையான புல் பூண்டுகளை எங்கேயும் காணவில்லை.

ஒரு தினம், தம் குடிசையின் வாயிலில் நின்றிருந்த சச்சிதானந்தர், "நித்யானந்தா!" என்று சிஷ்யனை அழைத்தார்.

நித்தியானந்தன் வெளியே வந்தான்.

"அதோ பார்!" என்று விரலால் சுட்டிக்காண்பித்தார் குரு.

மேல் வானம் செவ்வரி படர்ந்து தகதக என்று மின்னியது. எதிரே தொலை தூரத்தில், வெறிச்சென்று நின்றிருந்த சந்தன மரங்களும் ஆற்றங் கரையில் இருந்த பூதாகாரமான ஆல விருட்சமும், இந்த வர்ண ஒளியின் குறுக்கே நின்று, இதைக் கோடு கோடாகப் பிளந்து காட்டின.

நித்யானந்தன் கண் இமைக்காமல், இந்த அற்புதக் காட்சியைப் பார்த்தான். ஆல விருட்சத்தின் அடியில் முட்டு முட்டாய்க் கிடந்த கற்பாறைகள், மஞ்சள் வெயிலில் தோய்ந்து, மதயானைக் கூட்டம் ஒன்று படுத்திருப்பது போல் பிரமை உண்டு பண்ணிய தோற்றம், சட்டென்று அவன் மனதைக் கவர்ந்தது. உற்சாகத்துடன் கைகளை ஒன்றோடொன்று தேய்த்துக் கொண்டு, "சுவாமி! அந்தக் கற்பாறைகள்!" என்றான்.

குருவின் முகத்தில் புன்னகை அரும்பிற்று.

"அந்தக் கல்லிலே என்ன இருக்கிறது?" என்றார். நித்யானந்தன் பெருமூச்செறிந்தான்.

"சுவாமி! மன்னிக்க வேண்டும். என்னவோ ஞாபகம் வந்துவிட்டது. என் பூர்வாசிரம வரலாற்றைத் தங்களுக்குச் சொல்லவில்லையே. எங்கள் ஊரில் முதியவனான சிற்பி ஒருவன் இருந்தான். உபயோகமற்ற பாறைக் கற்களில் அவன் கை பட்டாலே போதும்; அவைகளுக்கு உயிர் வந்துவிடும். தேஜோ மயமான சிற்ப வடிவங்களைச் சிருஷ்டிக்கும் திறமை படைத்தவை அந்தக் கைகள். பொழுது போக்காக நானும் அவனிடம் சிறிது காலம் இந்தக் கலையைப் பழகினேன். இந்தக் கற்களைப் பார்க்கையில் என் கை ஊறுகிறது."

குரு புன்முறுவலுடன் இதைக் கேட்டார். அவருக்கு என்ன தோன்றியதோ? "அப்படியா? எனக்கு ஓர் ஆசை உண்டாகிறது. இன்னொரு முறை காசிக்குப் போக உத்தேசிக்கிறேன். போனால் மறுபடி இந்த இடத்துக்கு வருவோம் என்று சொல்வதற்கில்லை. நிர்மானுஷ்யமான இந்த வனப் பிரதேசத்தில் மனித வாசனை ஏற்படும்படி செய்தோமானால், நாம் இங்கே தங்கியது வியர்த்தமாகாது. மகாதேவனான ஈசுவரனின் திருவிளையாடலை அற்புதமான சிற்பங்களாய்ச் சிருஷ்டித்தால் என்ன?" என்றார்.

நித்தியானந்தன் ஆச்சரியத்துடன் அவரைப் பார்த்தான். "சுவாமி! உண்மையாகவா? தங்கள் ஆக்ஞைப்படியே செய்கிறேன்" என்று அவரை நமஸ்கரித்தான்.

சிற்ப வேலைக்கு வேண்டிய ஆயுதங்களைச் சேகரித்து வரப் போனவன், ஒரு வாரமாய்த் திரும்பி வரவில்லை, அப்புறம் அவன் வந்தபோது, அவன் கையிலிருந்த சிற்றுளியைப் பார்த்து, "இதுவா கல்லைப் பெயர்த்து உருவாக்குகிறது!" என்று சச்சிதானந்தர் வியப்புற்றார்.

தினம் காலையில் நீராடிய பின், நித்யானந்தன் ஆலமரத்தடிக்குப் போய் விடுவான். இருட்டிய பிறகு திரும்புவான். இப்படி நாட்கள் பல சென்றன. காசிக்குப் போகும் வேட்கை குருவுக்கு நாளுக்கு நாள் அதிகரித்தது.

ஒருநாள் சிஷ்யனை நோக்கி, "குழந்தாய்! சிற்பங்கள் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன?" என்று வினவினார்.

நித்யானந்தனின் உடலில் ஒரு நடுக்கம் தோன்றிற்று.

"சுவாமி! சிற்பங்கள் உருவாகிக் கொண்டு வருகின்றன. இன்னும் சில நாட்களில் பூர்த்தியாகக் கூடும்."

அன்று முதல் அவன் சிற்ப வேலையில் கழித்த நேரம் அதிகரித்தது. இருட்டிய பிறகும் வெகு நேரம் ஆசிரமத்துக்குத் திரும்புவதில்லை. காலையில், விடியு முன்பே எழுந்து போய் விடுவான்.

அப்புறமும் அவனது வேலை விரைவில் பூர்த்தியாவதாய்த் தெரியவில்லை.

3

வசந்த காலம் வந்தது.

மொட்டையாய் நின்ற மரங்கள் துளிர் விட்டன. சில்லென்று காற்று வீசியது. பூமி பசுமை நிறம் காட்டி, கண்ணையும் கருத்தையும் குளிர்வித்தது.

சச்சிதானந்தர் பொறுமை இழந்தார். "நித்யானந்தா! காசிக்கு நான் எப்பொழுது போகிறது?" என்றார் ஒரு தினம்.

"சுவாமி! மன்னிக்க வேண்டும். வருகிற பௌர்ணமிக்குள் எப்படியாவது முடித்து விடுகிறேன். மறுநாளே புறப்படுவோம்." என்றான்.

அன்றையிலிருந்து நித்யானந்தனுக்கு இரவும் பகலும் ஒன்றாயின. சுக்கிலபட்ச மாதலால், இரவில் பால்போல் நிலவு பிரகாசித்தது. பல தினங்கள் இரவு முழுமையும் ஆற்றங் கரையில் கழித்தான். நாளுக்கு நாள் அவன் உடல் மெலிந்து வந்தது. வேறு எதிலும் அவன் கவனம் சென்றதாய்த் தெரியவில்லை. அர்த்தமற்ற - எதைப் பார்த்தாலும் பாராதது போன்ற - ஒரு பாவம் அவனது முகத்தில் குடிகொண்டது. அவனுடைய நடையிலும் ஒரு தடுமாற்றம் தோன்றியதைக் கண்டு, குரு கலக்கமுற்றார்.

அன்று பௌர்ணமி. தெளிவான ஆகாயத்தில் பூர்ணச் சந்திரனின் பொன்னிலவு. எங்கும் நிசப்தம். தனிமையான குடிசையில், தியானத்தில் ஆழ்ந்திருந்த குருவின் மனதில், திடீரென்று, "நித்யானந்தனின் வேலை எவ்வளவு தூரம் நடந்திருக்கிறது என்று பார்த்துத் தான் வருவோமே" என்று ஓர் எண்ணம் உதித்தது. எழுந்து வேகமாக ஆற்றங்கரையை நோக்கி நடந்தார்.

ஆலமரத்தினடியில் நிலா வெளிச்சம் புக, வழியில்லை. எங்கும் இருட்டு. டிங், டிங் என்று கல்லுளியின் சப்தம் வந்த இடத்தை நோக்கிச் சென்றவர், திடீரென்று நின்றார். அந்த இருட்டில், நித்யானந்தன், உலக ஞாபகமே அற்றவனாய்த் தன் வேலையில் ஈடுபட்டிருந்தான்.

ஒன்றும் கண்ணுக்குத் தோன்றாமல் சற்று நேரம் நின்றார் குரு. அதன் பிறகு, உருவங்கள் ஒவ்வொன்றாய்ப் புலனாயின. பத்மாசனத்தில் அமர்ந்திருந்த அர்ச்சுனத் தவசியையும், எதிரே வில்லும் கையுமாய் நின்ற சிவ வேடனையும் கண்டு, அவருடைய கண்கள் மலர்ந்தன.

சிவபெருமானுக்குப் பக்கத்தில், வேட்டுவக் கோலத்தில் இருந்த ஈசுவரியின் சிற்ப வடிவத்தைப்

பூர்த்தி செய்து கொண்டிருந்தான் நித்யானந்தன். இருட்டில் தடவிப் பார்த்தபடியே, அவன் கை சிறிதும் பிசகாமல் தன் வேலையில் முனைந்திருந்தது. அடக்க முடியாத ஆனந்தத்தினால், "குழந்தாய் நித்யானந்தா!" என்று கூப்பிட்டார் சச்சிதானந்தர்.

நித்யானந்தன் கல்லுளியைக் கையிலிருந்து நழுவ விட்டான். பதைக்கும் மனத்துடன் எழுந்து, "சுவாமி! மன்னிக்க வேண்டும். இதோ முடிந்து விட்டது. நாளைக்கே புறப்படுவோம்" என்றான். இவ்விதம் கூறிக் கொண்டே, குருநாதரை நமஸ்கரிப்பதற்காகக் குனிந்தவன், தான் செய்த கற்சிலையின் மேல் டங் என்று தலையை மோதிக் கொண்டான்.

அவன் கீழே விழாதவண்ணம், சச்சிதானந்தர் அவனை அணைத்துப் பிடித்தார். அவருடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகியது.

"நித்யானந்தா! இந்த இருட்டில் உனக்கு எப்படிக் கண் தெரிகிறது?" என்று வினவினார்.

"சுவாமி! இப்பொழுதெல்லாம் எனக்கு வெளிச்சம் அவசியம் இல்லை. பகல் இரவு என்ற பேதத்தை உணரும் சக்தியை இந்தக் கண்கள் இழந்து பல நாட்கள் ஆகின்றன."

இந்த வார்த்தைகளைக் கேட்டு, கல்லோடு கல்லாய் உணர்வற்று நின்றார் சச்சிதானந்தர். பயங்கரமான இந்த உண்மை அப்பொழுது தான் அவருக்கு விளங்கிற்று. சிஷ்யன் பார்வையை இழந்துவிட்டான். சிவபெருமானின் கண்களைத் திறந்துவிட்டதும், அவன் கண் மங்கியது. நிறுத்தாமல் இராப் பகலாய் மேலும் தொடர்ந்து வேலை செய்ததில், அவன் பார்வை அடியோடு போய் விட்டது.

ஆனால், கண் இழந்தும் கலைஞனின் கைகள் தம் கலைத்திறனை இழக்கவில்லை.

4

மறுநாள் காலை கோழி கூவும் நேரத்தில் ஆற்றங்கரையில் ஓர் அதிசயக் காட்சியை ஜனங்கள் கண்டார்கள். சுவாமியார், கையில் கம்புடன் முன்னால் வழி காட்டிச் சென்றார். கம்பின் இன்னொரு நுனியைப் பிடித்துக் கொண்டு, அவருக்குப் பின்னே தட்டுத் தடுமாறிக்கொண்டு நடந்தான் நித்யானந்தன்.

குருவும் சிஷ்யனும் காசி யாத்திரை கிளம்பி விட்டார்கள்.

அவர்களது மனோரதம் ஈடேறி விட்டது. நிர்மானுஷ்யமாய் இருந்த காட்டுப் பிரதேசத்தை நாடி யாத்திரிகர்கள் இன்றும் வருகிறார்கள். தெய்விகத் தோற்றம் வாய்ந்த சிற்பங்களைக் கண்டு அதிசயிக்கிறார்கள். அவற்றை நிர்மாணித்த கலைஞனின் கைத்திறமையை வியக்கிறார்கள்.

* * *

கிழவர் கதையை முடித்ததும், "எதற்காக இந்தக் கதை?" என்று கேட்டேன்.

அவர் சிரித்தார். "கலைஞன் உலகத்தைத் துறக்கலாம், ஆனால், அவனாலும் கலையைத் துறக்க முடியவில்லை" என்றார்.

அவர் வாய் மூடியதும், பளிச்சென்று ஒரு ஜோதி வீசியது. கண் திறந்து பார்த்தேன். இடியும் மின்னலும் அமக்களப் படுத்தின. இவற்றைத் தவிர, சுற்றிலும் ஒரே அந்தகாரம்; அமைதி.

கனவு தான்; என்ன அற்புதமான கனவு?

*

# சென்னையில் குண்டு

தி. ஜ. ர.

தினந்தோறும் படுக்கப் போகு முன், படுக்கை யருகிலே ஒரு 'யுத்த'த்தைப் பார்த்துவிட்டுத் தான் நான் படுப்பது வழக்கம். அதிலே கப்பல் கிடையாது; சப்மரின் கிடையாது; விமானம் கிடையாது; குண்டொன்றும் கிடையாது. ஆனால், ராஜா உண்டு; மந்திரி உண்டு; குதிரை உண்டு; ரதம் உண்டு; காலாள் வீரரு முண்டு. எல்லாரும் மரத்திலே பிறந்தவர். யுத்தம் என்றால், வேறொன்று மில்லை; சதுரங்க 'யுத்தம்'தான். சிறந்த ஆட்டக்காரர்கள் விளையாடிய விளையாட்டுக்கள், பத்திரிகைகளிலும் புத்தகங்களிலும் காணப் படுகின்றன அல்லவா? அவற்றில் ஒன்றை வைத்து ஆடிப் பார்த்த பிறகுதான், எனக்குத் தூக்கம் வரும்.

அன்றும் அப்படியே ஓர் ஆட்டத்தை ஆடிப்பார்த்தேன். மனது என்னவோபோல் இருந்தது. உள்ளத்திலே வெறிச்சென்று ஏதோ ஓர் ஏக்கம் பிறந்தது. கீதையைத் தொட்டுப் பல மாதங்களிருக்கும். அதைப் படிக்கலாம் என்று ஓர் எண்ணம் பிறந்தது. முதல் அத்தியாயத்தைப் பிரித்து, மூலத்தையும் மொழிபெயர்ப்பையும் படிக்கலானேன்.

துரியோதனன், தன் குருவிடம் இரு தரப்புச் சேனைகளையும் பற்றி வர்ணிக்கிறான்: 'எதிரி சேனை போதாதது; நமது சேனை போதியது' என்றோ, 'எதிரி சேனை அளவிறந்தது; நமது சேனை அளவுக்குட்பட்டது' என்றோ இருவிதமாக அர்த்தம் செய்யப்படும் சுலோகத்தைப் படித்தேன். 'எந்த அர்த்தம் நமக்குப் பிடித்தம்?' என்று முடிவு செய்ய முடியாமல் யோசிக்கலானேன்.

இச்சமயம், கொடி மின்னல் போல, என் அறைக்குள் 'பளீர்' என்று ஓர் ஒளி வீசியது. 'பட், பட், பட், பட்' என்று, கூரைக்கு மேலே வெடிச் சத்தம் கேட்டது. வெறி பிடித்தது போன்ற வெடிச் சத்தம். எதிரியின் விமானப் படையெடுப்புத்தான் என்று அந்த நொடியிலே எனக்குத் தோன்றியது.

வீட்டின் பின் கட்டில் இருந்த நண்பரை அழைத்து, விஷயத்தைச் சொன்னேன். அவரும் அவர் மனைவியும் கூடத்திலே வந்து நின்றார்கள்.

அப்பொழுதுதான் ஏ. ஆர். பி. அதிகாரிகள் அளித்த புத்தகத்தின் ஞாபகம் எனக்கு வந்தது. புத்தகத்தைப் புரட்டிப் படித்தேன்.

எதிரி விமானம் சென்னைக்கு வந்து போயிற்று. ஜனங்கள் துளியும் கலவரமில்லாமல்தான் வாழ்கிறார்கள். ஆனால், அவர்கள் ஒவ்வொருவரது உள்ளமும் எப்படி யிருந்திருக்கும்? ஒருவரது உள்ளத்தின் நிகழ்ச்சியும் இளர்ச்சியும் இங்கே சித்தரிக்கப்பட்டிருக்கின்றன.

குழந்தையின் கொசு வலையை அவிழ்த்தேன். 'குட்டையான சுவரின் அருகே இருப்பது நலம்' என்று புத்தகம் கூறியதால், குட்டையான சுவர் எது என்ற ஆராய்ச்சியில் இறங்கினேன். ரேழிச் சுவர்தான் குட்டை என்று முதலிலே தோன்றியது. குழந்தையின் தூக்கத்தைக் கலைக்காமல், அந்தச் சுவர் அருகே படுக்க விட்டேன். இரண்டு நிமிஷத்துக் கெல்லாம், 'அது குட்டை யல்ல; முன் கட்டில் உள்ள அறைச் சுவர்தான் குட்டை' என்று தோன்றியது. மீண்டும் குழந்தையை எடுத்து அங்கே விட்டேன். 'அடடா! கூடத்திலே கண்ணாடி பீரோ இருக்கிறதே' என்ற நினைவு வந்ததும், அறையின் கூடத்துக் கதவைச் சாத்தினேன். ஆமாம்; அரிக்கன் விளக்கு இருக்கலாமா? அதை ஒரு மூலையில் தள்ளினேன்.

மீண்டும் புத்தகத்தைப் படிக்க முயன்றேன்; ஓடவில்லை. சதுரங்கத்தை வைத்துக்கொண்டு ஆடினேன். 'அந்தப் பரபரப்பிலே விளையாட்டுக்கூட ஆட முடிந்ததா?' என்று நீங்கள் கேட்கலாம். கண் காட்சியிலே, ஒரு மரப் பொம்மை, 'சிகரெட்' குடிக்கவில்லையா? அதுமாதிரிதான், நான் அப்போது சதுரங்கமாடியதும்.

சற்று நேரம் சென்றது. பின் கட்டு நண்பர், "இது ஒத்திக்கையா யிருக்கலாம்" என்று சொல்லி, தம் மனைவியை அழைத்துக்கொண்டு; தூங்கச் சென்றுவிட்டார். எனக்குமட்டில், அந்த நம்பிக்கை ஏற்படவில்லை. ஏ. ஆர். பி. தொண்டர்கள், துணிவுடன் தெருவிலே நடமாடி, 'ஜன்னலை மூடுங்கள்', 'உள்ளே போங்கள்', 'கீழே வாருங்கள்' என்று எச்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

சில நிமிஷங் கழித்து, மீண்டும் 'பட், பட், பட், பட்' என்று சப்தம். ஆனால், இந்தத் தடவை சற்று எட்டிக் கேட்டது. விமான ரீங்காரம் வர வர மெலிந்து, ஏதோ கனவுபோல் கேட்டது.

"இனித் தூங்கு" என்றேன் மனைவியை.

"எப்படித் தூக்கம் வரும்?" என்றாள் அவள்.

சமீபத்தில் அவளுக்கேற்பட்ட சில விபத்துக்களையும் வேதனைகளையும் கூறி, "இந்த அனுபவமெல்லாம் பெற்ற நீயுமா அஞ்சுவது? மரண வேதனையை மனிதன் அறிய முடியாது. சிருஷ்டி வேதனையை அறிய முடியும்; அதுவும் பெண்களால் மட்டுமே. பெண்களுக்குப் பயமேது?" என்றேன்.

அவள் சிரித்தாள். ஆனால், நல்ல தூக்கம் மட்டில் அவளுக்கில்லை.

நான் தூங்கினேன். என்றாலும், என்றைக்கு மில்லாதபடி, ஐந்து மணிக்கே விழித்து விட்டேன். (அன்று முதல் இன்றுவரை, தினம் ஐந்து மணிக்கு விழித்து விடுகிறேன்.)

பொழுது விடிந்தது, நல்ல பொழுதாக. எங்கே பார்த்தாலும், நேற்றிரவுப் பேச்சுத்தான். எங்கள் தெருவிலே யாரைக் கேட்டாலும், "என் தலைக்கு மேலேதான் குண்டு வெடித்தது; எங்கள் வீட்டுக்கு மேலேதான் விமானம் பறந்தது" என்று பெருமையோடு சொன்னார்கள்.

மொட்டை மாடியிலே யிருந்து கொண்டு நேரே பார்த்தவர்களும் பலர் உண்டு. தமிழ் நாட்டின் பிரபல பாடகியும் சினிமா நட்சத்திரமுமான ஒருவரின் கணவரை "நேற்றிரவு எப்படி?" என்றேன். "ஓ! அப்போது நானும் என் அகமுடையாளும் மாடியில் உட்கார்ந்து பார்த்துக் கொண்டு தான் இருந்தோம்" என்று வெகு தமாஷாகவே கூறினுர்.

நேரே பார்த்தார்கள்; ஒத்திகை யென்று நினைத்தார்கள்; பயமில்லாத வீரர்களாயிருந்தார்கள்.

வெறி பிடித்த வெடிச் சத்தம் கேட்டேன்; மின்னல் போல் ஒளி கண்டேன்; உண்மையிலே எதிரி என நினைத்தேன்; வளைக்குள்ளே எலி ஓடி ஓடிப் பதுங்குவது போல, நான் நடந்து கொண்டேன்!

மறு நாள் மாலை வரையில், நகரெங்கும் இரண்டு கட்சிகள்; ஒத்திக்கையா, உண்மையா என்ற விவாதம் நடந்தது. கட்சிகள் தான் இரண்டு; ஆள்கள் ஒரே கோஷ்டிதான். ஒவ்வொரு நாவுமே இரு தரப்பு வாதங்களையும் மாறி மாறி நடத்தியது; ஒவ்வோர் உள்ளத்திலுமே இரு வித உணர்ச்சிகள் குமிழ்த்தன- 'அது ஒத்திக்கையாகவே இருந்து விடலாகாதா, ஆண்டவா' என்ற ஆசை ஒரு புறம்; 'உண்மையாகத்தான் இருந்திருக்குமோ, சைத்தானே!' என்ற அச்சம் மறுபுறம்.

நானும் வாதித்தேன்; உண்மையாய்த்தான் இருக்கும் என்று தீவிரமாய் வாதித்தேன். ஏன் அப்படி வாதித்தேன் என்ருல், உண்மை அல்ல என்று, யாராவது மறுக்க முடியாத ருசுக்களோடு ஸ்தாபிதம் செய்ய மாட்டார்களா என்ற ஆசையுடன்தான்.

மாலையில் பத்திரிகை வந்தது. "நேற்றிரவு சிறிது நேரம் அபாய எச்சரிக்கை இருந்தது. சில குண்டுகள் வீசப்பட்டன. சொற்ப விபத்துக்கள் நிகழ்ந்தன. பொருட் சேதமில்லை" என்று மையமாக ஒரு சர்க்கார் அறிக்கை பிறந்தது.

அட ஈசுவரா! உண்மையா, ஒத்திக்கையா? ஒரே ஒரு தமிழ்த் தினசரி, எதிரி விமானம் குண்டு வீசியதாக, சர்க்கார் அறிக்கையை வியாக்கியானத்தோடு மொழி பெயர்த்த பிறகுதான், நண்பர்களின் சந்தேகம் தீர்ந்தது. பெருமூச்சு விட்டார்கள். நானும் வீட்டுக்குக் கிளம்பினேன்.

சோதிடத்திலே துளிக்கூட நம்பிக்கை யில்லாத எனக்கு, ஒரு பட்சி சோதிடனைக் கண்டதும், அதைப் பார்க்க ஆவலுண்டாயிற்று. நிறை காட்டி, அதிருஷ்டத்தைத் தெரிவிக்கும் ஒரு ஒரு காலணு இயந்திரத்திடமும், என் வருங்காலத்தைப் பரிசீலனை செய்து கொண்டேன். பட்சி சொல்லிற்று 'என் எதிரி அழிவான்' என்று. இயந்திரமும் என் எதிரி அழிவதில் உறுதியாயிருந்தது. ஆகவே, ஜப்பான்காரன் நிச்சயமாய் அழிவான் என்ற மனேதிடத்தோடு வாழ்கிறேன்.

ஆயினும் எந்த ஜாகையில் இருந்து, எதிரி விமானச் சத்தத்தைக் கேட்டேனே அங்கே பின் இரவுகளைக் கழிக்க எனக்கு இஷ்டமில்லை. ஜாகை மாற்றினேன்.

இன்று வரை அந்த இரவு திரும்பத் திரும்ப ஞாபகம் வருகிறது; ஜப்பான் குண்டும் ஞாபகம் வருகிறது; கடவுளும் ஞாபகம் வருகிறார்.

சாதாரண காலங்களிலே, நான் ஒரு சம்சய வாதி. ஒரு சமயம், கடவுள் உண்டா இல்லையா என்று சந்தேகம் கொள்ளுவேன். இன்னொரு சமயம், கடவுளாவது மண்ணாங்கட்டியாவது என்று நாஸ்திக மனோபாவம் கொள்ளுவேன். மற்றொரு சமயம், கடவுள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நமக்கென்ன என்ற அலட்சிய வாதமும் செய்வேன். வேதாந்த பரமாக, அத்வைத நோக்கோடு, நிர்க்குணப் பிரம்மமான ஒரு சூன்யத்தைத் தியானிப்பதும் சில சமயம் என் வழக்கம். காலும் கையுமாய் ஓர் உருவம் பெற்ற கடவுளைப் பற்றி நினைப்பது மட்டில், எனக்குப் பெரும்பாலும் அசாத்தியமாயிருந்தது. ஆனால், இப்போதெல்லாம், சகுணப்பிரம்மம் ஒன்று, காலும் கையும் முளைத்து உருவம் பெற்ற தெய்வம் ஒன்று, எனக்கு அவசியமா யிருக்கிறது. அடியோடு புகல் அடைய அத்தகைய ஒரு தெய்வம் எனக்கு வேண்டியிருக்கிறது. பகவானே! நீ இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; என்னை மட்டில் காப்பாற்றி விடு! உனக்கு நிரம்பப் புண்ணியம் உண்டு!



## அவனும் மனிதன்தானே ?

வீடு வாசலை யெல்லாம் விட்டு எங்கேங்கேயோ சுற்றிய சோல்ஜர் ஒருவன், லாஸ் ஏஞ்செல்ஸ் செஞ்சிலுவைச் சங்க விடுதிக்குள் நுழைந்தான். அவனது முகம் சிவந்து ஏக்கம் நிறைந்திருந்தது.

"காப்பி குடிக்கிறாயா!" என்றார்கள் செஞ்சிலுவைத் தொண்டர்கள்.

"வேண்டாம்" என்றான் சோல்ஜர்.

"சிகரெட் வேண்டுமா?"

"வேண்டாம்."

"காகிதம், பென்சில் வேண்டுமா?"

"வேண்டாம்."

இப்படி எது கேட்டாலும் வேண்டாம் என்றான். ஆயினும், அவ்விடத்தை விட்டு அகலாமல், நின்று கொண்டே யிருந்தான். கடைசியில் அவன் நாக்குழறிய வண்ணம், "ஒன்று மில்லை. எனக்கு ஓர் ஆசை— நாலு வாரத்துக்குமுன், என் மனைவிக்கு ஒரு குழந்தை பிறந்திருக்கிறது. அந்தக் குழந்தையை நான் பார்க்க வில்லை. நாலு வாரக் குழந்தையொன்றைக் கையிலே எடுத்துவைத்துக் கொண்டால், அது எப்படியிருக்கும் என்று பார்க்க, எனக்கு ஆவலாயிருக்கிறது. நீங்கள் ஒரு குழந்தை கொண்டுவரமுடியாதா?" என்று கேட்டான்.

ஒரு மணி நேரத்துக்குள் அவ்விதமே நாலு வாரக் குழந்தை ஒன்று வந்து சேர்ந்தது, சோல்ஜர் ஆனந்தக் கண்ணீருடன், அதை மடியிலே வைத்துக் கொண்டு கொஞ்சலானான்!

சக்தி

# கதையும் காதலும்

மீ. வி. சபரிராஜன்

சில மாதங்களுக்கு முன் ஒரு தமிழறிஞருடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர் கூறினர்: "இன்று தமிழ் நாட்டில் சிறு கதை மோகம் அதிகமாக இருக்கிறது. தமிழர்கள் எழுதும் சிறு கதைகளில் இரண்டே இரண்டு ரசங்கள்தான் இருக்கின்றன: ஒன்று சோக ரசம்; மற்றொன்று காதல் ரசம். வாழ்க்கையிலே இந்த அழுகையையும் காதலையும் தவிர, வேறு எதுவும் இல்லையா? தற்போதிருக்கும் நிலைமையில், சுமார் பத்து வருஷமாவது தமிழ் நாட்டை விட்டு வேறு எங்காவது போய்விடலாம் போலிருக்கிறது. சாவையும் காதலையும் படித்துப் படித்துச் சலிப்பு உண்டாகி ரஸிக உணர்ச்சியே மறைகிறது."

இது உண்மையா?

இன்றைய உலக இலக்கியத்தில் சிறுகதை முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. எல்லா நாடுகளும் சிறுகதை இலக்கியத்தை அருமையாக வளர்க்கின்றன. சிறு கதையில் முக்கிய விசேஷம்: அது அளவில் குறைவு - ஆனால் சம்பவத்தில் பூரணம். நாவல் பல் வேறு விஷயங்களை எடுத்துக்கொண்டு அதை விரிவாக ஆராய்கிறது. நாவலுக்கு ஸ்வீகாரம் போன குழந்தை சிறு கதை. ஆனால், தாயைவிட அது பலவகையிலும் சிறப்புற்று விளங்குகிறது. நாவலை எடுத்துக்கொண்டால், கொட்டாவி விடுவதற்கு முன்னேற்பாடுகள் செய்துகொண்டு, படித்த இடத்துக்கு அடையாளங்களும் வைக்க வேண்டியதாக இருக்கிறது. ஆனால், சிறு கதை அப்படியல்ல. ஒரே மூச்சில் படித்துவிடலாம். தற்கால உலகம் ஒய்வு ஒழிவற்றது. பெரிய நாவல்களைப் படிப்பதற்கு, அதற்கு நேரம் இல்லை. சிறு கதைகளையே எல்லோரும் விரும்புகிறார்கள். ஆகையால், இப்போதும் எதிர்காலத்திலும் சிறு கதைக்கு நல்ல காலம் இருக்கிறது.

> சிறு கதை என்ருல், காதல்; காதல் இல்லாவிட்டால் காதல்! இந்த இரண்டையும் விட்டால், வேறொன்றுமே கிடையாதா? வாழ்க்கையிலே எத்தனை எத்தனையோ பொருள்கள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் கருத்தாய்க் கொண்டு விதம் விதமான சிறு கதைகளைத் தமிழ் எழுத்தாளர்கள் ஏன் எழுதலாகாது?

இத்தகைய சிறுகதை இலக்கியம் தமிழ் நாட்டில் பெருகி வருவது எல்லோருக்கும் மகிழ்ச்சி உண்டாக்கக்கூடிய விஷயம். ஏராளமான சிறுகதைகள் வெளியாகின்றன. எந்தப் பத்திரிகையை எடுத்தாலும் சிறுகதைகளே காணப்படுகின்றன. சிறு கதைகள் இல்லாத பத்திரிகை உயிர் வாழ்வதே அரிது என்ற நிலைமையும் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், சிறு கதைக்கு ஆணும் பெண்ணுந்தான் வேண்டுமா? முத்தமும் அழுகையும்தான் முக்கியமான அம்சங்களா? ஆணைப் பெண் சந்தேகிப்பதும் பெண்ணை ஆண் சந்தேகிப்பதும்தான் இலட்சியங்களா? இதில் மேல்நாட்டு ஆசிரி

யர்களின் போக்கு நம்மைத் திகைக்க வைக்கிறது. அவர்கள் ஏதோ சில வார்த்தைகளைக் கொண்டு வானையும் மண்ணையும் அளப்பதுபோல அற்புதங்களை நிகழ்த்துகிறார்கள். ஓநாயின் குடும்பவாழ்க்கை முதற்கொண்டு சிறு கதைகளுக்காக அவர்கள் எடுத்துக்கொள்ளும் விஷயங்கள் அநந்தம். இதரர் புறக்கணித்து, கண்ணால் காண்பதற்கே மறுத்துக் கைவிடும் விஷயங்களை, அவர்கள் அம்பலத்துக்குக் கொண்டுவந்து விடுகிறார்கள். சிறு கதைகளுக்காக அவர்கள் கையாளாத விஷயமே உலகில் இல்லை. வெறுங் கொட்டையை வைத்துக்கொண்டு கண்ணிமை மூடுவதற்குள் மாஞ்செடியை உண்டாக்கிக் காட்டும் மந்திர வாதியைப்போல, இந்தக் கதாசிரியர்கள் சில வார்த்தைகளை வைத்துக்கொண்டு தங்கள் மந்திரக் கோலால் அவைகளுக்கு மோகன சக்தியைக் கொடுத்து விடுகிறார்கள்.

ஆனால், தமிழ் நாட்டில் வெளியாகும் சிறுகதைகள் எத்தகையவை? 'தலையைத் தூக்கி முன்னாலே பார்க்கும்போது ராஜி காப்பியுடன் வந்து நிற்பதும், அவள் சுங்கடிச் சேலைக்காக அழுவதும், சினிமாவுக்குப் போக வேண்டுமென்று பிடிவாதம் செய்வது'மாகவே முடிகின்றன. சாரமற்றுச் சப்பென்று உளுத்துப்போன விஷயங்கள். அவை பலருடைய நேரத்தையும் பொருளையும் அறிவையும் பாழாக்குவதிலேயே முடிகின்றன. இதற்கு விதி விலக்காகச் சில சிறந்த கதாசிரியர்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பல கதைகளை எழுதி யிருக்கிறார்கள் என்பது உண்மை. ஆனால், அந்தக் கதைகளின் தொகை மிக மிகக் குறைவு. சிறுகதை வளர்ச்சிக்குத் தமிழ் நாட்டில் பூரண ஆதரவும் சந்தர்ப்பமும் இருந்தும், அது நன்கு வளர்ச்சி பெறாதது நம்முடைய துர்ப்பாக்கியமே. பெரும்பாலான சிறு கதைகள் பெயருக்கு மாத்திரம் சிறு கதைகளாக இருக்கின்றனவே தவிர, கருத்தில் ஏறக்குறைய மதனகாமராஜன், விக்கிரமாதித்தன் கதைகளைப் போலவே இருக்கின்றன. செப்பு ஆபரணம்; மேலே முலாம் பூசிப் பொன்னைக் காட்டுகிறார்கள்.

காதலை நாம் இழிவாகக் கருதி விடலாகாது. காதல் தெய்விகமானது, அகண்டமானது, புனிதமானது. வாழ்வு முழுவதுமே காதல் மயம். காதலற்ற வாழ்வு மரணமே என்றுகூடச் சொல்லலாம். அது நவ ரஸங்களுக்கும் தலைவன் போல. உலக இலக்கியத்தில் அது பெற்றிருக்கும் ஸ்தானம் அபூர்வமானது. காதல் இல்லாவிட்டால்,வாழ்க்கை பாலையாக மாறிவிடும்; உலகத்தில் இருள் சூழ்ந்துவிடும். மனிதனின் உள்ளம் ஒரு மென்மையான பற்றுக் கோட்டை விரும்புகிறது. அது பெண் வடிவமாக அமைந்திருக்கிறது.

ஆனால், காமம் காதலாகாது. காதலைக் கையாளும் முறை இலகுவல்ல. அது நம் ஆசிரியர்களிடம் அகப்பட்டுக்கொண்டு படும்பாடு கொஞ்சநஞ்ச மல்ல. காதலுக்கு வாயிருந்தால் அது கண்ணீர்விட்டுக் கதறும். காதல் புலனுகர்ச்சி அல்ல. புறவழகைக் கண்டு மயங்கித் தடுமாறுவது காதலாகுமா? தமிழ்க் கதைகளை வாசிப்பவர்களுக்கு, காதல் என்றால் துக்கத்தையும் ஏமாற்றத்தையும் தவிர வேறு எதுவுமே இல்லை என்று பொருள் படும்படியாக இருக்

கிறது. கதைக்குக் காதல் இன்றியமையாததல்ல. காதலை வலியக் கொண்டுவந்து புகுத்திவிடுவதால், கதைக்கு அழகு வந்து விடாது. "வாலிப முறுக்கில் ஆண் பெண் இருபாலாரிடையேயும் தோன்றும் மோகவெறி நிறைந்த காதலைக் கதையில் கொண்டுவந்து திணிப்பது சரியல்ல" என்று ஓர் அறிஞர் கூறியிருக்கிறார்.

**மா**ன்வனி என்ற இத்தாலியக் கதாசிரியர் காதல் கதைகளைப் பற்றிப் பின் வருமாறு கூறுகிறார் :

"இதாருக்குக் காமம் உண்டாக்கும் முறையில் காதலைப் பற்றிப் பேசவோ எழுதவோ கூடாது. உலகத்தில் காதல் அவசியம் என்பதை நான் ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால், அந்தக் காதல் சரக்கு ஏற்கனவே மலிந்திருக்கிறது. அதை நாம் மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டியதில்லை. அனாவசியமான வேலையில் என் நேரத்தைப் பாழாக்குகிறீர்கள்? உலகத்துக்குத் தேவையான வேறு பல வகை உணர்ச்சிகளும் பாவங்களும் இல்லையா? எழுத்தாளன் தன் சக்திக் கேற்ப, அத்தகைய பாவங்களை மனித இதயத்தில் புகுத்தலாமே! இரக்கம், அன்பு, சுயநலத் தியாகம் முதலிய லட்சியங்களைக் கையாளலாமே!......"

அவர் மற்றோரிடத்தில் கூறுவதாவது :

"உலகத்தில் காதலைப்பற்றி மனிதன் எழுதியிருக்கும் மிக அற்புதமான கவியையோ கட்டுரையையோ நான் பார்க்க நேர்ந்தால், அதை எழுதி வைத்துக் கொள்ளுவதற்காகப் பேனாவையும் கடுதாசியையும் தேடுவேனென்று நான் கருதவில்லை. அவ்வாறு நான் தேட நேர்ந்தால், அதற்காகப் பின்பு மிகவும் வருந்துவேன்."

நாம் வெளி அழகை வர்ணிப்பதிலேயே பெருமுயற்சி செய்கிறோம். பெண்ணின் ஒவ்வோர் அங்கத்துக்கும் உவமை கூறும்போது, உவமேயம் வெட்கித் தலை குனிந்துவிடும் போலிருக்கிறது. அக அழகையும் பாவங்களையும் எடுத்துக்காட்ட விரும்புவதில்லை. ஆன்மாவின் உயர்வையும் தாழ்வையும் அறிவதற்கு அக அழகே இன்றியமையாதது. பெண்ணின் சந்திரவதனம், தாமரைபோன்ற கண்கள் ஆகியவற்றைக் காட்டிலும் அவளுடைய ஒழுக்கம், சீலம், மனதுக்குள் நடக்கும் உணர்ச்சிப் போராட்டங்கள் முதலியவையே உயர்ந்தவை. புற அழகும், அக அழகும் ஒருங்கே சித்தரிக்கப்பட்ட கதைதான், நம் மனத்தைத் தொட்டு அதிர்ச்சி உண்டாக்க வல்லது.



## அதிகாரி மறதி

ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர், தம்முடைய மனைவிக்கு ஒரு கடிதம் எழுதுகையில், ஞாபக மறதியாக, "தங்கள் தாழ்மையுள்ள ஊழியன்" என்று வரைந்து கையெழுத்துப் போட்டுவிட்டார். மனைவி அந்த வரியை ஒரு முறைக் கிருமுறை படித்தாள். அவள் முகத்திலே மெல்ல ஒரு புன்னகை அரும்பியது. "உம்! இதைத் தெரிந்துகொள்ள உங்களுக்கு இத்தனை நாள் ஆயிற்று?" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டாள்.

# குடியரசின் குறைநிறைகள்

வெ. சாமிநாத சர்மா

குடியரசு என்பது மேல்பார்வைக்குச் சுலபமாகவும் அதிக உற்சாகத்தைத் தரக்கூடியதாகவும் இருக்கிறது. ஆனால், இதன் கீழ் வாழும் பிரஜைகளுக்குத்தான் அதிகமான பொறுப்பும், கல்வி ஞானமும், சீல சுபாவமும் இருக்கவேண்டும். ஏற்கனவே கூறியுள்ளபடி, இவர்களுக்கு ஆளும் உரிமையும் ஆட்படும் கடமையும் இருக்கின்றன. இந்த இரண்டு பொறுப்புகளையும், ஒன்றுக்கொன்று முரண்படாமல் நிறைவேற்றிக்கொண்டு செல்வதற்கு அதிகமான அறிவும் திறமையும் தேவையல்லவா? ஓரளவு நெறி பிசகிவிட்டாலும், ஒழுக்க ஹீனங்கள் மலிந்துபோய், ராஜ்ய சக்தியே அரிக்கப்பட்டு அழிந்து போகும்.

குடியரசின் கீழ், ஜனங்களுடைய சமத்துவம் முக்கியமாகக் கருதப்படுகிறதல்லவா? அதைப் போலவே ஜனங்களுடைய சுதந்திரமும் முக்கியமாகக் கருதப்படுகிறது. இந்தச் சமத்துவமும் சுதந்திரமும் தங்களுக்கு உண்டு என்ற காரணத்தினால்தான், ஜனங்கள் குடியரசை அதிகமாக விரும்புகிறார்கள். இப்படி விரும்புவது இயற்கை.

குடியரசென்றால் கலப்பற்ற பிருந்தாவனம் என்று யாரும் நினைக்க வேண்டியதில்லை. அதில் பல குணங்களுண்டு; ஆனால், அவ்விதமே குறைகளுமுண்டு. அந்தக் குணங்களின் பயனை அடைய வேண்டுமானால், குறைகளையும் சமாளித்துத்தான் ஆகவேண்டும். குடியரசு வேண்டுவோர், அந்தக் குணங்களை மட்டுமல்ல, குறைகளையும் அறிந்துகொள்வது அவசியமாகும்.

ஏனென்றால், "உலகத்திலே தோன்றி மடிகிற எந்த ஜீவராசியும், எவ்வளவு கஷ்டப்பட்டாவது சுதந்திரத்தோடுதான் வாழ விரும்புகிறதே தவிர, எவ்வளவு சுகத்துடனும் பாதுகாப்புடனுமோ இருந்து அடிமையாக உயிர் வைத்துக்கொண்டிருக்க விரும்புவதில்லை. இதனாலேயே முடியாட்சியின் கீழோ அல்லது வேறு எந்த ஆட்சியின் கீழோ ஜனங்கள் மிகவும் சௌக்கியத்துடனும் க்ஷேமத்துடனும் இருந்தபோதிலும் அதிலிருந்து விடுதலை பெற்று, தங்களுக்குப் பூரண சுதந்திரம் இருக்கக்கூடிய ஓர் ஆட்சி முறையை விரும்புகிறார்கள்; அதனை யடைவதற்காகச் சகலவிதமான போராட்டங்களிலும் ஈடுபடுகிறார்கள்.

"எந்த ஆட்சி முறையின்கீழ், ராஜ்ய நிர்வாக அதிகாரமானது, ஒரு சிலரிடத்திலோ அல்லது குறிப்பிட்ட ஒரு வகுப்பினரிடத்திலோ ஒப்படைக்கப்படாமல், ஜனப் பொதுவினிடத்தில் ஒப்படைக்கப்படுகிறதோ, அதற்கே குடியரசு அல்லது ஜனநாயகம் என்று பெயர்" என ஒரு கிரேக்க ஆசிரியன் கூறுகிறான். ஜன சுதந்திரத்துக்காக வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசுகிற ஜான் ஸ்டுவர்ட் மில் என்பவன், "ஆட்சி முறைகளிலே மிகச் சிறந்தது எதுவென்றால், அரச சக்தியானது, அதாவது எல்லாவற்றிற்கும் மேற்பட்டிருக்கிற ராஜ்ய நிருவாக அதிகாரமானது ஜனப்பொதுவினிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்க வேண்

டும்; இந்த அதிகாரத்தைப் பிரயோக்கிற உரிமையில் ஒவ்வொரு பிரஜைக்கும் பங்கிருக்க வேண்டும். இந்த உரிமையைப் பிரயோகிக்கிற அளவோடு அந்தப் பிரஜை திருப்தி யடைகிறவனாகவும் இருக்கக்கூடாது. அதிகாரப் பொறுப்பை ஏற்று நடத்த வேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டால், அதற்கும் அவன் தயாராயிருக்க வேண்டும்" என்கிறான். எனவே, குடியாட்சியின் கீழ், பிரதியொரு பிரஜைக்கும் எந்த அளவுக்கு உரிமையுண்டோ அந்த அளவுக்குக் கடமையும் உண்டு என்று ஏற்படுகிறது.

எல்லாப் பிரஜைகளும் சேர்ந்து ராஜ்ய நிருவாகத்தில் பங்கெடுத்துக் கொள்வது என்று சொன்னால், 'தகுதியுள்ள எல்லாப் பிரஜைகளும்' என்றே அர்த்தம். இந்தத் தகுதிகள் யாவை? (1) வயது வந்தவர்களா யிருக்க வேண்டும்; அதாவது 18 வயது அல்லது 21 வயது ஆகி இருக்க வேண்டும்; (2) சித்த சுவாதீனமுள்ளவரா யிருக்க வேண்டும்; (3) கல்வியறிவுடையவரா யிருக்க வேண்டும்; (4) குற்றஞ் செய்து தண்டனை யடைந்தவரா யிருக்கக் கூடாது—இவையே அடிப்படையான அல்லது முக்கியமான தகுதிகள். இவை தவிர, ஆஸ்தி மதிப்பைக் கொண்டும், கல்வியறிவின் அளவைக் கொண்டும் இந்தத் தகுதிகள் நிர்ணயிக்கப்படுகின்றன. இவை ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு விதமாக அனுஷ்டிக்கப்படுகின்றன. பின்னால் சொல்லப்பட்ட இந்த இரண்டு தகுதிகளும் அவசியமாக வற்புறுத்தப்படுகிற அநேக நாடுகளில் அநேகம் பிரஜைகள் ராஜ்ய நிருவாகத்தில் பங்கெடுத்துக்கொள்ள முடியாதவர்களாகி விடுகிறார்கள். இப்படிப் பங்கெடுத்துக்கொள்ள முடியாதவர்களைப் பெரும்பாலோராகவுடைய ஓர் ஆட்சியைக் குடியாட்சி என்று எப்படிச் சொல்வது? இதனாலேயே, ஒரு நாட்டின் மொத்த ஜனத்தொகையில் எத்தனை பேர் மேற்படி தகுதியுடையவர்களா யிருக்க வேண்டுமென்பதைச் சில அரசியல் பண்டிதர்கள் நிர்ணயித் திருக்கிறார்கள். எந்த விகிதாசாரத்துக்கு மேற்படி தகுதியுள்ள பிரஜைகள் இருந்தால் அந்த ஆட்சியைக் குடியாட்சி என்று சொல்லலாம் என்பதையும் திட்டப்படுத்தி யிருக்கிறார்கள். ஜனநாயக சித்தாந்தத்தின் தலைசிறந்த பண்டிதனாகிய லார்ட் ப்ரைஸ் என்பவன் கூறுகிறான்: "தகுதியுள்ள பிரஜைகளில் பெரும்பான்மையோரின் இச்சைப்படி நடைபெறுகிற ஆட்சிக்கே ஜன ஆட்சி என்று பெயர். மொத்த ஜனத்தொகையில் இந்தத் தகுதியுள்ள பிரஜைகள் பெரும்பாலோரா யிருக்க வேண்டும். அதாவது நான்கில் மூன்று பங்கு பேராவது இருக்க வேண்டும். இதை இன்னும் சிறிது விளக்கப்படுத்திச் சொல்ல வேண்டுமானால், இந்தத் தகுதியுள்ளவர்களுடைய ஓட்டு பலத்துக்குச் சமதையாக இவர்களுடைய தேக பலம் இருக்கவேண்டும்."

இங்கே தேகபலம் என்றது, எண்ணிக்கையைப் பொறுத்த அளவுக்குத்தான் சொன்னதே தவிர, தனிப்பட்டவர்களுடைய தேகபலத்திற்கல்ல. இந்த வியாக்கியானத்தினுடைய சாரம் என்னவென்றால், குடியரசு அல்லது ஜனநாயகத்தின் கீழ், பெரும்பான்மையோரான பிரஜைகளுக்கு ஓட்டுரிமை இருக்கவேண்டு மென்பதாகும்.

குடியரசானது, ஜனங்களுடைய சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்டிருப்பதால், அந்தக் குடியரசின்கீழ் வாழும் வயது வந்த எந்த ஒரு பிரஜைக்கும், தன் எண்ணத்தையோ, அபிப்பிராயத்தையோ, தன் னிஷ்டப்படி தாராளமாகத் தெரிவிக்க உரிமையுண்டு. இப்படித் தெரியப் படுத்துகிற உரிமையை, அந்தப் பிரஜை, சொல்லினுலும் பிரயோகிக்கலாம்; எழுத்தினுலும் பிரயோகிக்கலாம். எண்ண உரிமை வேண்டும், எழுத்துரிமை வேண்டும், பேச்சுரிமை வேண்டும் என்று சொல்லப்படுவன வெல்லாம், ஒரு குடியரசு முறையின் கீழ் வாழும் சாதாரணப் பிரஜையினுடைய நியாயமான உரிமைகளே யாகும். ஆனல், இந்த உரிமைகளை அனுபவிக்கிற விஷயத்தில் பிரதியொரு பிரஜையும் ஒரே ஒரு நிபந்தனைக்குமட்டும் உட்பட வேண்டும். அதென்ன வென்ருல், எந்த ஒரு பிரஜையும், தனக்குள்ள பேச்சுரிமை, எழுத்துரிமை முதலியவற்றை அனுதடிப்பதன் மூலமாக மற்ற எந் ஒரு பிரஜைக்கும் தீங்கு உண்டு பண்ணக்கூடாது. மற்றவர்களைத் தம் கருத்துக்குத் திருப்பலாம்; ஆனல் திரும்புமாறு கட்டாயப் படுத்தக்கூடாது.

குடியரசின் மற்ருேர் அம்சம் என்னவென்ருல், தனிப்பட்ட ஒரு சிலருக்கோ அல்லது ஒரு வகுப்பாருக்கோ எந்த விதமான விசேஷச் சலுகைகளும் இருக்கக் கூடாது; அப்படியே எந்த ஒரு பிரிவினருடைய உரிமைக்கும் பங்கம் ஏற்படக்கூடாது. எல்லா நபர்களுக்கும், அவரவர்களுடைய சக்திக்கும் சூழலுக்கும் இயைந்த முறையில் பூரண வளர்ச்சி பெறுவதற்கு உரிமை இருக்க வேண்டும்; சந்தர்ப்பங்களும் கொடுக்கப்பட வேண்டும். ஒரு சிலருடைய உரிமைகளைப் பறிமுதல் செய்து, அந்த உரிமைகளை வேறு சிலரிடம் ஒப்படைக்கக்கூடாது.

இவை யாவும் ஒரு குடியரசின் இன்றியமையாத லட்சணங்கள்.

எந்த ஓர் ஆட்சி முறையிலும் குறைகளும் இருக்கும்; நிறைகளும் இருக்கும். லட்சியம் வாய்ந்த அரசியல் என்று சொல்கிருர்களே, அதாவது குறைகளே இல்லாத அரசியல், அது ஒரு சிலருடைய கற்பனையில்தான் இருந்து வந்திருக்கிறது.

அரசியல் முறைகளிலே மிகச் சிறந்ததென்று பெரும்பாலான அரசியல் பண்டிதர்களால் கருதப்படுகிற குடியரசு அல்லது ஜனநாயகம் என்கிற ஆட்சி முறையிலும்கூட, எவ்வளவு சாதகங்கள் உண்டோ அவ்வளவு பாதகங்களும் உண்டு என்று அரசியல் அறிஞர்கள் எடுத்துக் காட்டி யிருக்கிருர்கள். இந்தச் சாதகங்கள், பாதகங்கள் இரண்டையும் கீழே வரிசைப்படுத்திக் காட்ட விரும்புகிருேம்.

**சாதகங்கள் :**

1. குடியரசின் கீழ், எந்த ஒரு பிரிவினருடைய தனிப்பட்ட நன்மையும் நாடப் படுவதில்லை. சமுதாயப் பொதுவுக்கு நலம் பயப்பது எதுவோ அதுவே விசேஷமாகக் கருதப்படுகிறது. சிறப்பாக, ஜனத்தொகையில் பெரும்பான்மையோரா யுள்ள விவசாயிகள், தொழிலாளர்கள் முதலிய சமுதாயத்தின் கீழ்ப் படியி லுள்ளவர்களுடைய நன்மையே அதிகமாகக் கவனிக்கப் படுகிறது.

2. குடியரசின் கீழ், ஜனங்களுக்கு நன்மை தருவது எதுவோ அதனையே குறிக்கோளாகக் கொண்டு ராஜ்ய விவகாரங்கள் நடைபெறுகின்றன. இதனால் ஜனங்கள் சந்துஷ்டியுடன் வாழ முடிகிறது.

3. ராஜ்ய நிருவாகத்தில் பங்கெடுத்துக் கொள்வதற்கு எல்லோருக்கும் ஒரே மாதிரியான சந்தர்ப்பம் கிடைக்கிறது. திறமையுள்ளவர்கள் முன்னுக்கு வரலாம்.

4. குடியரசானது ஆடம்பரத்தை வெறுக்கிறது. ஜனங்கள் எளிய வாழ்க்கையை, அதாவது இயற்கையான வாழ்க்கையை நடத்துகிறார்கள்.

5. அரசியலில் எவ்வித ஆடம்பரத்துக்கும் இடமில்லையாதலினால், ஜனங்கள் ஒழுக்கமுள்ளவர்களா யிருக்கிறார்கள்.

6. ராஜ்ய நிருவாகத்தில் எல்லாருக்கும் பங்கு உண்டு என்ற காரணத்தினால், எல்லாப் பிரஜைகளும், ராஜ்யத்தைத் தங்களுடைய ராஜ்யமென்றும், அதன் க்ஷேமத்துக்குப் பாடுபடுவது தங்கள் பொறுப்பென்றும் உணர்ந்து நடக்கிறார்கள். இந்தப் பொறுப்புணர்ச்சியானது, பிரதியொரு பிரஜையினுடைய சொந்த வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை முதலியவைகளிலும் பிரதிபலிக்கிறது. இதனால் ராஜ்யத்திலுள்ள ஆண், பெண், குழந்தை ஆகிய சகல பேரும், பொறுப்புணர்ந்து காரியங்களைச் செய்துகொண்டு போவதைக் கடமையாகக் கொண்டு விடுகிறார்கள்.

7. குடியரசின் கீழ் அரசாங்கத்துக்கு விரோதமான சூழ்ச்சிகள், கிளர்ச்சிகள், புரட்சிகள் முதலிய எதுவும் நடைபெறுவதற்கு ஏதுவில்லை. ஏனென்றால் ஜனங்களுடைய ஆட்சியே நடைபெறுகிறதல்லவா? அப்படி அவர்கள் கிளர்ச்சியோ, புரட்சியோ செய்வார்களானால், தங்களுக்கு விரோதமாகத் தாங்களே நடந்து கொண்டவர்களாகிறார்கள்.

8. சமுதாயத்திலுள்ள பல திறப்பட்டவரும் ராஜ்ய நிருவாகத்தில் பங்கெடுத்துக் கொள்கிறார்க ளாதலினால், பல திறப்பட்ட சக்திகளும் ராஜ்ய நிருவாகத்துக்குத் துணை செய்கின்றன. இதனால் நிருவாக யந்திரம், ஜனங்களுடைய எண்ணங்களைச் சரியாகப் பிரதிபலித்துக் கொண்டு ஒழுங்காக ஓடுகிறது.

இனி, பாதகங்கள் என்னவென்பதைப் பற்றிச் சிறிது கவனிப்போம்.

**பாதகங்கள் :**

1. குடியரசானது ஸ்திரமான ஓர் அரசாகாது. ஏனென்றால், எந்த நிமிஷத்திலும், அதனை, விவரமறியாத பாமர ஜனங்களும், ராணுவத்தினரும் சேர்ந்து கவிழ்த்து விடுதல் கூடும்.

2. எல்லோருக்கும் ராஜ்ய நிருவாகத்தில் சமத்துவமான பங்குண்டு என்ற காரணத்தினால், திறமையுள்ளவர்கள் அரசாங்க உயர்பதவிகளுக்கு வர முடியாமல் போகிறது.

3. மற்றும், பலர் சேர்ந்து நடத்துகிற ஆட்சிமுறை யாதலினால், யாருக்கும் சொந்தப் பொறுப்பு என்பதில்லாமல் போகிறது. பிரதியோர் அதிகாரியும் தம் பொறுப்பைக் கழித்து விடுவதிலேயே குறியாயிருப்பர்.

4. குடியரசானது, எண்ணிக்கைக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறது. ஒரு நாட்டில் பெரும்பாலான ஜனங்கள் அறிவுக் குறைவுள்ளவர்களாகவே இருக்கிறார்கள். எனவே பெரும்பாலோரின் ஆட்சி யென்றால்,

அது அறிவுக்குறைவுள்ளவர்களின் ஆட்சியென் றேற்படுகிறது. பெர்னாட் ஷா போன்ற சில அறிஞர்கள் இந்த மாதிரியே அபிப்பிராயப்படுகிறார்கள்.

5. குடியரசின் கீழ், பரம்பரை முக்கியத்துவம் பெறுவதில்லை யாதலினால், அரசாங்கத்தின் அன்றாட நடைமுறைகளில் ஒரு தொடர்ச்சி இல்லாமல் போகிறது. இதனால் நிருவாக யந்திரமானது ஒழுங்காக ஓடாமல் அடிக்கடி தடைப்படும்.

6. குடியரசின் கீழ், வாய்ச் சமத்காரமுள்ளவன் வெற்றியடைகிறான்; சுலபமாகத் தலைவனாகி விடுகிறான். அவன் சுயநலவாதியாக இருக்கும் பட்சத்தில், தேசமக்களைத் தன் வழியில் இழுத்துக் கொண்டு போய், படுகுழியில் அழுத்தி விடுதல் கூடும்.

7. குடியரசின்கீழ் எந்த விதமான ஒரு ராஜ்ய விவகாரமும் துரிதமாக நடைபெற முடியாது; அந்தரங்கமாகவும் நடைபெற முடியாது.

8. குடியரசின்கீழ், கலை, இலக்கியம் முதலியவை பூரண விகாச மடைய முடியாது.

இவ்விதம் குறைகளும் நிறைகளும் ஏறக்குறையச் சமமாகக் கலந்திருந்த போதிலும், குடியரசு தான், மற்றெல்லா ஆட்சி முறைகளைக் காட்டிலும் சிரேஷ்டமான தென்ற அபிப்பிராயம் இப்பொழுது அதிகமாக வலுத்து வருகிறது.



## தூக்க மருந்து

(ஒரு மனிதனுக்கு இராத்தூக்கம் வராமல் தவித்தான். தற்கொலை செய்து கொள்ளலாமா என்று எண்ணினான். தன் எண்ணத்தை, டாக்டர் ஹென்ரி லிங்க் என்ற மனோதத்துவ நிபுணரிடம் அவன் தெரிவித்தான்.

"சரியான யோசனை. நீ சாவதற்குச் சுலபமான ஒரு வழியை நான் சொல்லித் தருகிறேன். இராச் சாப்பாடு உண்டதும், உலாவப் போவதாக, உன் குடும்பத்தாரிடம் சொல்லி விட்டு, வெளியே கிளம்பு. ஆனால், மெதுவாய் நடக்காதே; ஓட்டமாய் ஓடு. உன் இருதயம் பலவீனமாய் இருப்பதால், வெகு தூரம் ஓடியதும், ஓய்ந்து களைத்து விழுந்து தானாகவே செத்து விடுவாய். தற்கொலை என்று யாரும் அறியமாட்டார்கள்" என்றார் டாக்டர்.

அந்த மனிதன் முதல் நாள் இரவு அப்படியே ஓடினான். களைத்து விழுந்து சாகும் படியான தூரம் செல்லுமுன், 'சாகவாவது' என்று இயற்கையுணர்ச்சி குறுக்கிட்டது. வீட்டுக்குத் திரும்பினான். ஓடிய களைப்பினால், குழந்தை போல், அயர்ந்து தூங்கினான். மறுநாள் இரவு மறுபடியும் இதேமாதிரி தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தான். அன்றும் பாதி வழியிலே திரும்பிவந்து, நன்றாய்த் தூங்கினான். மூன்றாம் நாள் இரவிலும் ஓடித்திரும்பிய போது, மனதுக்கு மிக்க தெளிவு ஏற்பட்டது; 'சாகக் கூடாது; சிரஞ்சீவியாய் வாழவேண்டும்' என்ற ஆசையும் அவனுக்குப் பிறந்து விட்டது!)



# நியாயம்

புரோபஸர் என். எஸ். பட்கே

அந்தக் கிராமம் வேட்டையாடுபவர்களுக்கு மிக முக்கியமாகிவிட்டது. ஜனங்கள் அதனுடைய உண்மைப் பெயரை மறந்து விட்டார்கள். ரயில்வேக் கால அட்டவணைகளில் அதை 'வேட்டைக்காரன் ரோடு' என்றே குறிப்பிட்டார்கள். நீண்ட விடுமுறைக் காலங்களில் எல்லாம் பம்பாயிலிருந்து வரும் ஒவ்வொரு புகை வண்டியிலிருந்தும், வேட்டைக்காரர்கள் கூட்டங் கூட்டமாய் அந்த ஸ்டேஷனில் வந்து இறங்குவது வழக்கம். அந்தச் சிறிய பிளாட்பாரம் அவர்களுடைய பெட்டி, படுக்கை, தொப்பி, துப்பாக்கி முதலியவைகளால் நிறைந்துவிடும். தங்களுடைய ஜோடுகள் 'டக் டக்' என்று சத்தமிட, துரைகளைப் போல் அவர்கள் நடந்து செல்லும்பொழுது, அந்த வேடிக்கையைப் பார்ப்பதற்காக, கிராமத்திலுள்ள சிறுவர், சிறுமியர் கூட்டமாகக் கூடுவார்கள். இது விடுமுறைக் காலங்களில் நடக்கும் விஷயம். ஆனால், ஒவ்வொரு வாரக் கடைசியிலும் சிலர் அங்கே வேட்டை யாடுவதற்கு வருவது வழக்கம். ஒரு வேலையுமில்லாத பிரபுக்கள், நினைத்த போதெல்லாம் வருவது முண்டு. அவர்கள் என்றாவது ஒருநாள் ஏதாவது ஒரு வண்டியிலிருந்து ஆடம்பரத்துடன் இறங்குவார்கள்; சிகரெட்டிலிருந்து புகையை மிதக்க விடுவார்கள்; கூலிகளின் தலைகளில் தங்கள் சாமான்களை எல்லாம் ஏற்றிக்கொண்டு பிரயாணிகள் தங்கும் பங்களாவை நோக்கிச் செல்வார்கள்.

கிராமத்துச் சிறுவர்கள் அந்தப் பிரபுக்களின் ஜோடுகளை



'கண்ணுக்குக் கண்; பல்லுக்குப் பல்' என்று கிறிஸ்தவ வேதத்தின் பழைய ஏற்பாடு கூறியது. அந்த நியாயத்தை மாற்றிவிட்டார் ஏசு பெருமான். நியாயம் என்பது பழிக்குப் பழியா? கருணை வெள்ளமா? எது என்று நிரூபிக்கும் இந்த மராத்திக் கதையை, சு. குருசாமி மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார்.

யும், தொப்பிகளையும் ஆச்சரியத்துடன் பார்ப்பார்கள். தாங்கள் வணங்கக் கூடிய தேவர்களாக அவர்களை மதித்தார்கள். தாங்களும் வேடிக்கையாக வேட்டையாடுவது வழக்கம். கிழிந்த தொப்பிகளின்மீது காகிதத் துண்டுகளை ஒட்டி, தொப்பி செய்து கொள்வார்கள். அந்தப் பிரபுக்களைப் போல, இவர்களும் அர்த்தமில்லாத பெரிய பெரிய வார்த்தைகளைக் கூறிக்கொண்டு, கையில் ஒரு தடியை வீசிக்கொண்டு நடப்பார்கள். சிற்சில சமயங்களில் பெரியவர்களும் வேட்டைக்காரர்களின் வரவால் சந்தோஷமடைவதுண்டு. ஏனென்றால், கூலிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் அவர்கள் அதிகக் கூலி கொடுப்பது வழக்கம்.

ஆனால், கிராமத்தின் பெரும்பான்மையான ஜனங்கள் இவ்வேடுவப் பிரபுக்களின் வருகையால் சந்தோஷ மடையவில்லை. சில வேடர்கள் கருணையுள்ளவர்களாக இருந்தார்கள். எனினும், அவர்களில் பெரும்பான்மையோர் குரூர சிந்தையுடையவர்களாயும், போக்கிரிகளாவுமே இருந்தார்கள். கிராமத்துப் பெண்களிடம் தகாத வார்த்தைகள் கூறுவதும், நாள் முழுதும் அவர்களிடம் பல விதமான வேலைகள் வாங்கிக் கொண்டு கூலி கொடுக்காமல் அவர்களை அடித்து விரட்டுவதுமாக இருந்தார்கள். யாராவது ஒரு வேடனுக்கு வேட்டை தென்பட்டுவிட்டால், அவன் பைத்தியம் பிடித்தவன் போல் அதை விரட்டிக் கொண்டு செல்வான். வயல்களையோ வயல்களிலுள்ள பயிர்களையோ, அவன் சிறிதும் பொருட்படுத்துவ தில்லை. இந்தக் கொடுமைகளை எல்லாம் கிராமவாசிகள் மௌனமாய்ச் சகித்துக் கொண்டிருந்தார்கள், என்ன செய்வது, எவ்வித நியாயங் கிடைக்கும் என்பது ஒன்றும் அவர்களுக்குத் தெரியவில்லை. ஏதும் செய்யத் தோன்றாமல், கலியுகத்தைச் சபிப்பார்கள்,

வேடர்கள் வந்த செய்தி தெரிந்ததும், கிராமவாசிகள் அவர்களை மனதாரத் திட்டுவார்கள். அவர்களுடைய மனைவிமார்களும் அந்தத் 'தொப்பி வாலா'க்களைக் கண்டபடி வைவார்கள்.

பெரியோர்கள் அவர்களை ஏன் வெறுக்கிறார்களென்பது சிறுவர்களுக்கு விளங்குவதில்லை. பளபளவென மின்னும் துப்பாக்கிகளையும் தோள் பட்டையிலிருந்து தொங்கிக் கொண்டிருக்கும் ஊது குழல்களையுங் கத்திகளையுங் கொண்டிருந்த அந்த வேடர்களை, தாங்கள் பெரியவர்களான பின் மனதார வரவேற்க வேண்டுமென நிச்சயித்துக் கொள்வார்கள். ஆகையினால், அந்த வேடுவர்களைக் கண்டவுடன், 'சாஹெப்! சாஹெப்!' என்று கத்திக்கொண்டு, தங்கள் பெற்றோர்களை ஏமாற்றி அவர்களுக்குப் பின்னால் ஓடி விடுவார்கள்.

ஒரு சமயம் சில பிரபுக்கள் வேட்டையாட வந்திருந்தார்கள். ஒருவருக்கும் தெரியாமல் அவர்களைப் பின்தொடர்ந்து செல்வதற்கு ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தான் ஸ்ரீபதி. ஆனால், அவனுடைய தாயார், பக்கத்திலே புல் வெட்டிக் கொண்டிருந்தாள். அவளும் அவனுடைய கருத்தையறிந்து கொண்டாள். ஆகையால், ஸ்ரீபதி சற்று தூரத்தில் நின்று தனக்காகக் காத்துக் கொண்டிருந்த தோழர்களிடம் எல்லா விஷயங்களையும் சமிக்ஞைகளினாலேயே தெரிவித்து, சந்தர்ப்பம் கிடைத்தவுடன், அவர்க

ளோடு சென்று சேர்ந்து விடுவதாகவுங் கூறினன்.

அவனுடைய நண்பர்களெல்லாம் சென்றுவிட்டார்கள். அதைப் பார்த்ததும் ஆனந்த மிகுதியினல் தன் வாயில் விரலை வைத்துக் கொண்டு 'சீட்டி' அடித்துவிட்டு, தாயார் வெட்டியிருந்த புல்லை எல்லாங் கட்டித் தூக்க ஆரம்பித்தான்.

இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அவனுடைய தாய் முக்தா, "இதென்னடா வேடிக்கை? மற்றக் காவாலிப் பயல்களைப் போல் நீயுமா அந்த வேடுவர்களின் பின்னல் பைத்தியக்காரன்போல் சுற்றிக்கொண்டு திரிய நினைக்கிருய்? வேட்டையாடும் அந்தக் குரங்குகளைப் பார்த்துத் தானே நீ இப்பொழுது 'சீட்டி' யடித்தாய்?" என்று கேட்டாள்.

"இல்லை அம்மா, நான் அதற்காகச் 'சீட்டி' அடிக்கவில்லை. சில குருவிகள் கதிர்களிலுள்ள தானியத்தைத் தின்ன ஆரம்பித்தன. அவைகளை விரட்டுவதற்காகக் கல்லை எறிந்து, 'சீட்டி' யடித்தேன்" என்ருன் ஸ்ரீபதி.

'சீட்டி'க்கு முன்பு கல்லெறிந்த சத்தம் கேட்கவில்லை. ஸ்ரீபதி பொய் சொல்லுகிருன் என்று தாயார் அறிந்து கொண்டாள். ஆயினும், பேசாமலிருந்து விட்டாள். ஸ்ரீபதி அவளுடைய ஒரே மகன்; அநேக வருஷப் பிரார்த்தனைக் கப்புறம் பெற்றெடுக்கப் பட்டவன். அவள் அந்தப் பாலகன் மீது அத்யந்தப் பிரியங் கொண்டிருந்தாள். கையினல் அவனைத் தண்டிக்க, அவளுக்கு மனம் வரவில்லை ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டே, தன் வேலையில் லயித்துவிட்டாள்.

தாயார் வேலையில் கவனமாயிருப்பதைக் கண்டதும், வேடுவர்களின் பக்கம் ஸ்ரீபதி நோக்கினன். அவர்கள் வெகு தூரம் போய் விட்டார்கள். அவன் ஒரு பெருமூச்சு விட்டான். அவர்களுக்குப் பின்னல் ஓடும் ஆனந்தம் கிடைக்க வில்லையே என்ற துக்கத்தில், அவன் சற்று நேரத்துக்கு முன்பு தாயினிடம் பொய் சொல்லியதைக் கூட மறந்து விட்டான். வேடிக்கை பார்க்க முடியவில்லையே என்ற துக்கந்தான் அவனுடைய மனதில் அப்பொழுது பிரதானமாயிருந்தது.

சூரியனை நோக்கினன். அது சிறிது சிறிதாக மறைந்து கொண்டிருந்தது; ஆனல், அஸ்தமிப்பதற்கு இன்னும் அரைமணி நேரமாகும். வேடர்கள் மீண்டும் ஒரு முறை அவனிருந்த பக்கம் வருவார்கள் என்று நினைத்தான்.

அந்த நம்பிக்கையில் அவன் சந்தோஷமடைந்து, வேஷ்டியை வரிந்து கட்டிக்கொண்டு, புன்முறுவலுடன் புல்லை எல்லாம் சேர்த்துக் கட்ட ஆரம்பித்தான்.

அரை மணி நேரம் கழிந்தது. முக்தா புல் வெட்டிக் கொண்டே வெகு தூரத்துக் கப்பால் வயலின் இன்னெரு மூலைக்குச் சென்று விட்டாள். சூரியன் கொஞ்சங் கொஞ்சமாக அஸ்தமித்துக் கொண்டிருந்தான். கரும்புப் பயிர்களின் நிழல் ஸ்ரீபதியின் மீது விழுந்து கொண்டிருந்தது. இன்னும் சில கட்டுகள் கட்டிவிட்டு, வீட்டுக்குச் செல்ல விடை கொடுக்குமாறு தாயாரிடங் கேட்கலாமென்று நினைத்தான்.

அப்பொழுது திடீரென்று ஏதோ ஒரு வஸ்து அம்பைப்போல் வேகமாக அவனைக் கடந்து சென்

றது. அது என்ன் என்பதை அறிந்துகொண்டான். இரண்டு மான்கள் எங்கிருந்தோ வேகமாய் ஓடி வந்து பந்துகளைப்போல் சென்று விட்டன. ஸ்ரீபதி ஆனந்த மிகுதியினால் ஆர்ப்பரித்துக் கொண்டு, புல்லை ஓங்கி ஓர் அடி அடித்து, பித்துப் பிடித்தவன் போல் மான்களின் பின்னால் ஓடினான். மான்களைக் கரும்புத் தோட்டத்தில் ஒளித்து வைத்துக் கொண்டு, பிரபுக்கள் கையில் அவை சிக்காதபடி தடுக்கவேண்டுமென்று தீர்மானித்தான்.

ஆனால், ஏழு வயதுப் பாலகனா மான்களைப் பிடித்துவிடப் போகிறான்? அவை மின்னலைப்போல் தோன்றிக் கரும்புப் பயிர்களிடையே மறைந்துவிட்டன.

ஸ்ரீபதி ஓடுவது வீணாயிற்று. அவன் ஏமாற்றத்துடன், ஓடிய களைப்பினால் இரைத்துக்கொண்டே, வரப்பின் மீது நின்றான்.

அச் சமயம் இரண்டு துப்பாக்கிகள் சுடப்பட்டன. ஒரு குண்டு ஸ்ரீபதிக்கு வெகு சமீபத்தில் சென்றது. அந்த அதிர்ச்சியினின்றும் அவன் சமாளிப்பதற்குள், இன்னொரு குண்டு வந்து அவனை நோக்கியே சுடப்பட்டதுபோல் அவனுடைய இதயத்தில் பாய்ந்தது.

அவன் 'ஓ' என்று அலறித் தரையின் மீது விழுந்தான். அந்த மாலை நேரத்தில் கூடுகளுக்குச் சென்று கொண்டிருந்த பட்சிகளுங்கூட அவனுடைய கூக்குரலைக் கேட்டு நடுங்கின.

துப்பாக்கியினால் சுட்ட பிரபுக்கள் வேகமாய் ஓடி வந்து, மானுக்குப் பதிலாக ஒரு சிறுவன் மரணாவஸ்தையில் துடித்துக் கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டார்கள். சுற்றிலுமிருந்த கிராமத்துப் பெண்கள் அங்கே வந்து கூடினார்கள். முக்தாவுக்கும் விஷயம் தெரிவிக்கப்பட்டது. மார்பிலும் தலையிலும் அடித்துக் கொண்டு அவள் ஓடி வந்தாள். சாகுந்தறுவாயிலிருந்த தன் புத்திரனுக்குப் பக்கத்தில் தரையின் மீது படுத்துப் பைத்தியம் பிடித்தவள் போல், ரத்த மயமான அவனுடைய மார்பை முத்தமிட ஆரம்பித்தாள்.

அந்த வேடுவர்களில் ஒருவன் டாக்டர். அவன் ஸ்ரீபதியின் காயங்களைக் கட்டி, முசாபரி பங்களாவுக்கு அவனைத் தூக்கிச் சென்றான்; ஆனால், பாவம்! பையன் இறந்துவிட்டான்!

ஸ்ரீபதியின் தந்தை அபாவும் மாமா ஹைபதியும் பூனா சென்றிருந்தார்கள். அவர்கள் மறுநாள் வந்தார்கள். அபா பூனாவிலிருந்து தன் மகனுக்காக ஒரு புது வேஷ்டி, ஒரு பந்து, ஒரு கரும்பலகை இத்தனையும் வாங்கி வந்திருந்தார். மாமா தம் மருமகனுக்காக அழகிய வர்ணத்துடன் கூடிய ஒரு மூக்குக் கண்ணாடி வாங்கி வந்திருந்தார்.

ஸ்ரீபதி இறந்த சமாசாரத்தையறிந்ததும், அவர்களுக்குத் துக்கம் தாளவில்லை. முக்தா துக்க சாகரத்தில் மூழ்கிக் கிடந்தாள். அவர்களிருவரும் அவளைச் சமாதானப் படுத்தும் நிலைமையிலா இருந்தார்கள்?

பொதுவாக வேடர்களுக்கு இரக்க சிந்தை இருப்பதில்லை. ஆனால், அவர்களுங்கூட இந்தத் துக்க சம்பவத்துக்காக மனம் நொந்தார்கள். அவர்கள் அபாவினிடம் சென்று, புத்திரனின் மரணத்துக்கு ஈடு செய்வதற்காகப் பணங் கொடுக்க முயற்சித்

தார்கள். "இதற்கேற்ற தண்டனையை நீங்கள் நீதி மன்றத்தில் அடைவீர்கள்" என்று அபா கூறினன்.

வேடுவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் பங்களாவுக்குத் திரும்பினார்கள். அந்த இரவே அபா பூனுவுக்குச் சென்று, ஒரு வக்கீலின் மூலமாகப் பிராது தாக்கல் செய்தான்.

மறுநாள் ஹைபதி அந்த வேடுவப் பிரபுக்கள் தங்கியிருந்த பங்களாவின் சுற்றுப்புறத்தில் திரிந்து கொண்டிருந்தான், வராந்தாவில் அவர்கள் அரட்டையடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்ததும், திரும்பி வந்து விட்டான். அன்றிரவு அபா பூனுவிலிருந்து வந்து, "நல்ல வக்கீல் ஒருவர் மூலமாகப் பிராது தாக்கலாகிவிட்டது. நமக்கு வெற்றி நிச்சயம்" என்றான்.

முக்தா அதைக் கொஞ்சமேனும் கவனிக்கவில்லை. அவள் அழுகையுங் கண்ணீருமாயிருந்தாள். ஹைபதியும் ஒன்றும் பதில் சொல்லவில்லை. நள்ளிரவில் அபா வெளியில் வந்து, ஹைபதி வெளியே எங்கோ செல்வதைக் கண்டான்.

"யார், ஹைபதியா?"

"ஆம்"

"நடு ராத்திரியில் எங்கே போகிறாய்?"

"எங்குமில்லை; சும்மா கொஞ்ச தூரம்........?"

அச்சமயம் ஹைபதி கையில் பிடித்திருந்த கோடரியின் மீது அபாவின் பார்வை சென்றது.

"இந்தக் கோடரி எதற்காக? இரவில் அதைக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்?"

"நியாய சபையில் நீதி கிடைக்குமென்று நான் நம்பவில்லை. இரத்தத்துக்குப் பதில் இரத்தம்! எனக்கு அந்த நியாயந்தான் விளங்குகிறது. அந்த வேடுவர்களின் தலைகளைக் கொய்து கொண்டுவந்து, என் தங்கையை அவர்களுடைய முகங்களில் காறி உமிழச் சொல்வேன்."

கோடரியை அவனுடைய கையினின்றும் பறித்து, "உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? நியாயங் கிடைக்காவிட்டால், அதற்காக மனிதன் மிருகமாகி விடுவதா? வீட்டுக்குள் போய்ப் பேசாமல் தூங்கு" என்று அபா கூறி, அவனை வீட்டுக்குள் இழுத்துச் சென்றான்.

சில மாதங்களுக்கப்புறம் வியாச்சியம் முடிவடைந்தது. அந்தப் பிரபுக்களுக்கு ஐநூறு ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டு, அந்தத் தொகை அபாவுக்குக் கொடுக்கப்பட்டது.

அவன் வீட்டுக்கு வந்தபோது முக்தா முற்றத்திலிருந்தாள். ஹைபதி காளைக்காகக் கயிறு திரித்துக் கொண்டிருந்தான். அபா நோட்டுகளைத் தன் மனைவியின் முன்னால் வைத்து, "வேடுவர்கள் நூறு ரூபாய் கொடுப்பதாகச் சொன்னார்கள்; ஆனால், நான் என்ன பால் குடிக்கும் பச்சைக் குழந்தையா, அவர்கள் வார்த்தையில் ஏமாறுவதற்கு? இதோ பார், கோர்ட்டில் ஐநூறு ரூபாய் கொடுக்குமாறு தீர்ப்பாகியிருக்கிறது" என்றான்.

ஆனால், முக்தா அதனால் சந்தோஷமடையவில்லை. அவளுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டது. கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது. அவள் சோகம் நிறைந்த

குரலில், "உங்களுக்கு இதெல்லாம் எப்படி விளங்கும்? ஸ்ரீபதியை நான் இழந்ததிலிருந்து என் இதயத்தில் ஒரு பகுதி காலியாகி விட்டது. அது இந்த ரூபாயினால் நிறைந்து விடுமா? நாசமாய்ப் போன இந்த நோட்டுகளை நெருப்பில் போடுங்கள்" என்று சொல்லி, அந்த நோட்டுகளை எடுத்து அடுப்பில் வீசி எறிந்தாள். சிறிது நேரத்தில் அவை எரிந்து சாம்பலாயின. அபா பிரமித்து நின்றான். அவன் ஹைபதியின் நியாயத்தைக் குறை கூறினான். ஆனால், தான் மிக நாகரிகம் என்று நினைத்த இந்த நியாயத்தை, தன்னுடைய மனைவி, தனயனை இழந்த அந்தத் தாய், துச்சமாக மதித்தாள்.

ஒரு வருஷத்துக் கப்புறம் முக்தாவுக்கு இன்னொரு புதல்வன் பிறந்தான். அவள் அளவுகடந்த ஆனந்தத்துடன், "இதோ பாருங்கள்! என்னுடைய ஸ்ரீபதி மறுபடியும் என் கர்ப்பத்திலிருந்து வந்திருக்கிறான். அதே மூக்கு, அதே விழிகள், அதே ஸ்ரீபதிதான் என்னுடைய பாலைக் குடிப்பதற்காக மறுபடியும் வந்திருக்கிறான்" என்றாள்.

ஹைபதி உயிருக்கு உயிர் வாங்க விரும்பினான்; அபா பணத்தைக் கொண்டு வந்தான்; ஆனால், முக்தாவோ தன் இதயத்தின் ரத்தத்தை அமிர்தமாக்கி விட்டாள். அது உண்மையான நியாயமா அல்லது இதுவா என அவள் கேட்கிறாள்.

இதற்கு அவர்கள் இருவரும் என்ன பதில் சொல்வார்கள்?



## பெண் தர்மம்

நியூயார்ச் நகரில், போலீ பீரிஸன் என்ற ஒருபெண்மணியின் மணி பர்ஸ் காணமல் போயிற்று. அப்போது அதில் இருபத்தைந்து டாலர் இருந்தது. சில நாளில் விலாசம் தெரிவிக்காத ஒருத்தியிட மிருந்து அது திரும்பிவந்து சேர்ந்தது. இப்போது அதில் பதினேழு டாலர் தான் இருந்தது. ஆனால், அந்தப் பணத்தோடு ஒரு சிறிய நறுக்கும் காணப்பட்டது. நறுக்கில் எழுதியிருந்ததாவது; "எனக்கும் ஒரு மணிபர்ஸ் காணமல் போயிற்று. எட்டு டாலர் அதில் இருந்தது. அதை இதிலிருந்து எடுத்துக் கொண்டு விட்டேன்."

## யாருக்குச் செல்வம்?

ஒரு சமயம் தட்சணேசுவரத்தில், ராணி ராஸ்மணியின் தோட்டத்தில், களவு போயிற்று. விஷ்ணு ஆலயத்தில் விக்ரகங்களின் மீது அணியப்பட்டிருந்த ஆபரணங்கள் காணமற் போயின. ராஸ்மணியின் மருமகனும் கோயில் அதிகாரியுமான மதுரபாபுவும் நானும், சங்கதி என்ன என்பதை அறிய, அங்கே சென்றோம். சென்றதும், "தெய்வமே! நீர் ஒன்றுக்கும் உதவாதவர்! உம்முடைய ஆபரணங்களைக் கள்ளர் களவாடினார்கள்; அதைத் தடுக்க உமக்குச் சக்தியில்லையே!" என்று மதுரபாபு கூச்சலிட்டார். இதைக் கேட்டதும், நான் சட்டென்று திரும்பி, "என்ன நீரும் இப்படி மதியீனமாய்ப் பேசுகிறீர்? நீர் உயர்த்திப் பேசும் நகைகள் எல்லாம், இதோ விக்கிரகமாக எழுந்தருளி உம்மால் வணங்கப் படும் ஜகதீசுவரனுக்கு, களிமண்ணுக்குச் சமானம். ஐசுவரியங்களுக்கு அதிதேவதையான மகாலட்சுமி கூட, இவரிடமிருந்து தான் தனது மகிமையைப் பெறுகிறாள் என்பதையும் நீர் ஞாபகத்தில் வையும்" என்றேன்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

# உடம்பும் மருந்தும்

டாக்டர் எச். ஓ. ஸ்வார்ட் அவுட், எம். டி.

பிரதம சிகிச்சை பயில்வது மிக்க அவசியமாகும். இதைப் பல விதங்களில், பொது ஜனங்களுக்கு அடிக்கடி வலியுறுத்தி வருகிறார்கள். ஆகையால், இவ் விஷயத்தில், அவர்களுக்கு மேலும் ஊக்கமூட்டத் தேவையில்லை. பலத்த விமானப் படையெடுப்புகள் நடப்பதாக வைத்துக்கொள்வோம். அச்சமயம் குண்டுக் காயம் பட்டவர்கள், வைத்திய நிபுணர்களின் சிகிச்சைக்காகக் கொஞ்ச நேரம் காத்திருக்கத்தான் நேரும். இப்படிக் காத்திருக்கும் நேரத்தில் நோயாளிக்கு என்ன சிகிச்சை செய்யவேண்டும் என்றறிந்த யாராவது ஒருவர் ஸ்தலத்திலே இருப்பார்களானால், எத்தனையோ உயிர்களைக் காப்பாற்றி விடலாம்.

பிரதம சிகிச்சை செய்ய விரும்புவோருக்கு முதன் முதலாக ஒரு திறமை வேண்டும். ரத்தப் போக்கைத் தடுப்பதுதான் அந்தத் திறமை. சிறு காயங்களிலிருந்து ரத்தம் வெளிவந்தால், சில நிமிஷ நேரத்தில், அது தானாகவே நின்றுவிடும். ஆனால், பெரிய காயங்களிலிருந்து பெருகும் ரத்தப் போக்கோ, அதே சில நிமிஷ நேரத்தில், நோயாளியின் உயிருக்கே அபாயமாய் முடிந்துவிடும்.

ரத்தப் போக்கைத் தடுப்பதற்கு நாம் எவ்வளவுக்கெவ்வளவு பலமாக அமுக்குகிறோமோ அந்த அழுத்தம் தான் முக்கியமாகும். காயத்தின் மேலேயோ, காயத்துக்குள்ளேயோ, இப்படி அழுத்தி ரத்தப் போக்கைத் தடுக்கலாம். அல்லது உடம்பில் காயம் பட்ட இடத்துக்கு எந்தப் பக்கமாக ரத்தம் வருகிறதோ அந்தப் பக்கத்தில் ரத்தக்குழாயை அழுத்தலாம். சிறு காயங்களிலோ, அல்லது ரத்தக் குழாயைப் பிடிக்கக் கஷ்டமான இடங்களில் உண்டாகும் காயங்களிலோதான், காயத்தின் மேலே அல்லது காயத்துக்குள்ளே அழுத்தி ரத்தப்போக்கைத் தடுக்க வேண்டி வரும். அப்போது, தொற்று நோய் ஏற்படாமல் சாத்தியமான மட்டில் தடுக்கவேண்டும். அதற்காக, பஞ்சுப் பட்டையொன்றைக் காயத்தின் மேல் அழுத்தவேண்டும்.

கடுமையான காயங்களின் ரத்தப் போக்கு இரண்டு வகைப்படும்: தொடர்ந்து கறுப்பு ரத்தம் வருவது ஒரு வகை; பளிச்சென்று சிவப்பு ரத்தம் பீறிட்டு வருவது மற்றொரு வகை. முதல் வகையான ரத்தம், உடம்பின் பல பாகங்களிலிருந்து, நாடி நரம்புகளின் மூலம் இருதயத்தை நோக்கி வருவது. இந்தக் கரு ரத்தத்தைத் தடுக்க மிகப் பலமாய் அழுத்த வேண்டிய தேவையில்லை. காயத்துக்கு அருகே, இருதய மிருக்கும் பக்கத்துக்கு எதிர்ப் பக்கத்தில் சிறிது பலத்தோடு வெவ்வேறு இடங்களில் அழுத்திப் பார்க்கவேண்டும். அவ்விதம் செய்தால், ரத்தப்போக்கைத் தடுக்க எந்த இடத்தில் தொடர்ச்சியாய் அழுத்திக்கொண்டிருக்க வேண்டும் என்பதைக் கண்டு பிடித்துவிடலாம்.

இரண்டாவது வகையான ரத்தம், ரத்தக் குழாய் வழியாக இருதயத்திலிருந்து உடம்பின் பல பாகங்களுக்கும் வரும் சுத்த ரத்தம். இந்த ரத்தப் போக்கைத் தடுக்க, காயத்துக்கும் இருதயத்துக்கும் இடையிலே அழுத்த

**விமானப் படையெடுப்பு** நடந்தால், காயம் பட்டவர்கள் டாக்டர் வரும்வரை காத்திருக்க முடியாது. முதலாவதாக, ரத்தப் போக்கைத் தடுப்பது மிக்க அவசிய மாகும். இல்லையானால், உயிருக்கே அபாயம் விளையக்கூடும். ஆகையால், ரத்தப் போக்கைத் தடுப்பதற்குரிய சில முக்கியமான வழிகளை, 'குட் ஹெல்த்' என்ற பத்திரிகையில், டாக்டர் ஸ்வார்ட் எழுதி யுள்ளார்.

வேண்டும். தேகத்திலே 'நாடி ஸ்தானங்கள்' என்று சொல்லப்படும் சில இடங்கள் உண்டு. அந்த இடங்களில், எலும்புகளுக்கு அருகே பெரிய ரத்தக் குழாய்கள் ஓடுகின்றன. ரத்தப் போக்கைத் தடுக்க, அந்த இடங்களில் அழுத்துவதுதான் மிகவும் சௌகரிய மாயிருக்கும்; சிறந்த பலனும் தரும். இந்த இடங்களில் எதைத் தொட்டுப் பார்த்தாலும், நாடி ஓட்டம் தெளிவாய்த் தெரியும். இந்த இடங்களிலெல்லாம் நாடி ஓட்டத்தைக் கண்டு பிடிக்க, சாதாரண காலத்தில் அடிக்கடி பழகி வரவேண்டும். அவ்வாறு செய்தால், ரத்தப் போக்கைத் தடுக்க எங்கே அழுத்துவது என்று சட்டென்று கண்டு கொள்ளும் திறமை ஏற்படும்.

மிகவும் சாதாரணமாய்க் குறிப்பிடக் கூடிய 'நாடி ஸ்தானங்க' ளாவன: (1) இடுப்புக்கு நாலங்குலம் கீழே தொடையின் முன்புறமும் பின்புறமும்; (2) அக்குளுக்குக் கீழே நாலங்குலம் தள்ளிப் புஜத்தின் உட்புறம்; (3) கழுத்துப்பட்டை எலும்புக்குப் பின்புறம் கழுத்தின் அடிப்பகுதி; இங்கே புஜத்துக்கு ரத்தம் செல்லும் ரத்தக் குழாயை, கீழும் முதல் விலாவெலும்போடு அணைத்தும் பின்புறமாகவும் அழுத்தலாம்; (4) குரல் வளைக்குப் பின்னே கழுத்தின் ஒரு பக்கம்; இங்கே தலைக்கு ரத்தம் செல்லும் ரத்தக் குழாயை, கழுத்தில் தொடர்ந்துள்ள முதுகெலும்போடு அணைத்து அழுத்தலாம்; (5) தாடையில், கடைவாய்க்கு ஓரங்குலம் முன்னே, முகத்துக்கு ரத்தம் செல்லும் குழாய்; (6) காதுக்கு முன்னே, மண்டைக்கு ரத்தம் செல்லும் குழாய்.

இந்த 'நாடி ஸ்தானங்க'ளில் எதன் மீதும் விரலை வைத்தே அழுத்தலாம். என்றாலும், முதல் இரண்டு இடங்கள் சம்பந்தப் பட்ட மட்டில், துணியையோ, நீண்டு கொடுக்காத வேறு ஏதாவது பட்டையையோ கட்டி, ஒரு குச்சியைச் சொருகி முறுக்கிப் பிடிக்கலாம். இப்படிச் செய்யும்போது, நாடி ஸ்தானத்தில் அழுந்தும்படியாகப் பஞ்சுப்பட்டை ஒன்றைக் கெட்டியாக வைப்பது நல்ல பலன் தரும். சம்பந்தப்பட்ட அங்கத்துக்கு அழுகல்தசை போன்ற நிரந்தரக் கேடுகள் எவையும் ஏற்படாதிருப்பதற்காக, அந்தக் கட்டை, பத்து அல்லது பதினைந்து நிமிஷத்துக்கொரு தடவை பத்து அல்லது பதினைந்து விநாடி நேரம் தளர்த்திப் பிடிக்கவேண்டும்.



## குறிகாரன் கணக்கு

ஊருக்கெல்லாம் குறி சொல்லும் கோடாங்கி ஒருவன், ஒரு நாள் தலைவிரி கோலமாய்ப் போலீஸ் ஸ்டேஷனுக்குள் ஓடி வந்தான். "சாமி! சாமி! என் சம்சாரம் ஓடிட்டாளுங்க. அவளைக் கண்டு பிடிச்சுத் தாருங்களேன்" என்று கத்தினான்.

"நீதான் பெரிய குறிகாரனாயிற்றே! உன் மனைவி ஒளிந்து கொண்டிருக்கும் இடத்தை ஏன் நீயே குறி பார்த்துக் கண்டு பிடிக்கக் கூடாது?" என்று கேட்டார் போலீஸ் அதிகாரி.

கோடாங்கி, தன் கைகளைப் பிசைந்து கொண்டே, "பார்க்கலாமுங்க. ஆனால், யார் கூலி கொடுப்பாங்க, சாமி?" என்றான்.

## பறக்கும் மோட்டார்

ஆகாய விமானங்கள் நிர்மாணிப்பதில் பிரபலமுடையவரான வில்லியம் ஸ்டௌட் என்ற எஞ்சினீர், 1500 ராத்தல் மட்டுமே நிறையுள்ள ஒரு புதிய மோட்டார்க்காரை அமைத்திருக்கிறார். இதற்கு 35 அடி நீளமுள்ள இரண்டு றெக்கைகள் உண்டு. ஆனால், ரஸ்தாவிலே கார் ஓடும்போது, அந்த றெக்கைகள் மடங்கியிருக்கும். நினைத்தபோது, றெக்கைகளை விரித்தால், கார் ஆகாயத்திலே பறக்க ஆரம்பிக்கும். தரையில் மணிக்கு 70 மைலும் ஆகாயத்தில் மணிக்கு 100 மைலும் ஓடக்கூடிய கார். ரஸ்தாவிலே எவனாவது போலீஸ்காரனைக் கண்டால், தாண்டிக் குதித்து விடலாம். இதுதான் இந்தக் காரின் விசேஷ உபயோகமாம்!

யில்லாததால், ஐந்து ரூபாய் இல்லை யென்றும் மூன்று ரூபாய் வேண்டுமானால் தரமுடியும் என்றும் அவரிடம் சொன்னேன். கிடைத்த வரையில் சரி என்று, அதை அவர் வாங்கிச் சென்றார். நாலைந்து நாட்களுக்குள் திருப்பித் தருவதாகவே, அவர் மிக்க உறுதியாகச் சொன்னார். வருஷம் இரண்டாகி விட்டது. பணம் வந்தபாடில்லை.

இன்னொரு மனிதர் ஒருநாள் என்னைப் பார்க்க வந்தார். அவர் என் இளமைப் பருவ சிநேகிதர். சிறுவயதில் நடந்த சம்பவங்களைப் பற்றி நான் அவரிடம் பேசலாமென நினைத்தேன். ஆனால், அவர் எனது எண்ணத்தில் மண்ணைப் போட்டுவிட்டார்.

தம் சொந்த ஊருக்கு அவசரமாக மறுநாளே போக வேண்டுமென்றும் ரூபாய் இருபது வேண்டுமென்றும் சொன்னார். எல்லோரிடமும் சொல்வது போலவே 'தற்சமயம் பணமில்லையே' என்ற பழைய பல்லவியைப் பாட ஆரம்பித்தேன். ஆனால்,அவர் தமக்குப் பட்டணத்தில் யாரையும் தெரியாதென்றும், மறு மாதம் சம்பளம் வாங்கியவுடன் தருவதாகவும் 'நீர் இரங்கீர் எனில் புகலேது?' என்று ஆரம்பித்து விட்டார். எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. கடைசியில் ஒருவாறாக மனதைத் திடப்படுத்திக் கொண்டு, வழக்கப்படி தொகையில் பேரம் செய்யத் தொடங்கினேன். பத்து ரூபாய் தருவதாகச் சொன்னேன். வட்டி மிச்சம் பார்க்க வேண்டா மென்றும் வட்டி வேண்டுமானாலும் சேர்த்துத் தருவதாகவும் அவர் சொன்னார். ஒரு மணி நேரம் பேசினோம். முடிவில் 'என்னைப் பிடி, உன்னைப் பிடி' என்று பதினைந்து ரூபாய்க்கு இணங்கினார். அதைக் கொடுத்தனுப்பினேன். மாதம் ஒன்றல்ல, மூன்று போய் விட்டது. ஆளையோ பணத்தையோ பார்க்க முடியவில்லை.

ஒருநாள் இதற்கென்றே புறப்பட்டு மாம்பலத்துக்குச் சென்றேன். அங்கே தான் அவர் வசிக்கிறார். ஆளைக் கண்டு பிடித்து விட்டேன், அவருடைய வீட்டு



கடன்காரனின் தலையைக் கண்டதும் ஓட்டம்!



Page missing 145-152

வாசலில். உடனே பணத்தைப் பற்றிக் கேட்கத் தைரியமில்லே. அவரும் என்னுடன் வெகு கல கலப்பாகப் பல விஷயங்களைப் பற்றி (பணவிஷயம் தவிர) பேசிக் கொண்டே வந்தார். சிறிது தூரம் நடந்தோம். பக்கத்தி லிருந்த கிளப்பில் பலகாரம் சாப் பிடத்தான் அவர் அழைத்து வந் திருக்கிருர். இது எனக்குத் தெரி யாது. ஹோட்டலுக்குப் பக்கத் தில் வந்தவுடன், சாப்பிடக் கூப் பிட்டார். நான் "எனக்குப் பசிக்க வில்லே" என்று சொன் னேன். பலகாரத்தைக் கொடுத்து, பணத்துக்கு நாமம் போட்டு விடு வாரோ என்று எனக்குப் பயம். அவர் என்னைப் பிடித்து இழுக்கி ருர்; நான் வரமாட்டேன் என் கிறேன். ஐந்து நிமிஷநேரம் இம் மாதிரி மல்லுக்கட்டு நடந்து கொண்டே யிருந்தது. கடைசி வரையில் அவர் விடாக்கண்டரா யிருந்ததால், உள்ளே போய்ச் சேர்ந்தேன். சாப்பிடும் பொழு தெல்லாம் என் மனது சரி யான நிலைமையில் இல்லை; 'பதி னைந்துரூபாய்! பதினைந்து ரூபாய்!' என்ற ஜபத்திலேயே ஈடுபட்டிருந் தது.

பில்லுக்குப் பணம் கொடுக்கும் போதுகூட, நான் முந்திக்கொள் ளப் பார்த்தேன். ஆனல், அவர் விட்டபாடில்லை.

பிறகு, இருவரும் பக்கத்தி லிருந்த 'பார்க்'கில் புகுந்தோம். யுத்த விமரிசனம் செய்து கொண் டே வந்தார் நண்பர். எனக்கு ஒன்றும் ஏறவில்லை. நேரம் ஆகிக் கொண்டே யிருந்தது. வீடு திரும்ப வேண்டுமென்று தோன் றியது. ஆனல், வந்த காரியம்? கேட்டு விடுவோம் என்ற எண் ணம். ஆனல், முன்பின் அறியாத ஒரு பெண்மணியைப் பார்த்து, ஒரு வாலிபன் "கரும்பே. உன்னை......உன்னை நான்...காத லிக்கிறேன்......" என்று தைரிய மாகச் சொன்னலும் சொல்லி விடுவான் போலிருக்கிறது; பண விஷயமாக அவரிடம் கேட்க என் னல் முடியவில்லை. எப்படியிருந் தாலும் கேட்டுத்தானே ஆக வேண்டும்? தொண்டையைக் கனைத்துக்கொண்டு, கடைசியில் கேட்டே விட்டேன். அவரோ துளியும் பதருமல், "ஆமாம். அது விஷயமாகத் தான் சொல்லலா மென்றிருந்தேன். கையி லிருந்த பணமெல்லாம் ஒரு வழி யாகச் செலவழிந்து விட்டது. அடுத்த மாதம் நானே கொண்டு வந்து தருகிறேன். உங்களுக்குக் கவலையே வேண்டாம்" என்று பஞ்சப்பாட்டுப் பாடினர். என்ன செய்வது? 'கடன் கொடுத் தோம், பொறுத்திருப்போம், கட் டாயம் வரும்' என்று எண்ணிக் கொண்டே, வீடு வந்து சேர்ந் தேன். எத்தனையோ மாதங்கள் ஆயின. தவணைகள் சென்றன.

இதெல்லாம் நாகரிகக் கடன் கள். ஆனல், எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு ரிக்ஷாக்காரன் இருக்கிருன். அவன் புதிதாக வருபவர்களிடம் எல்லாம், "ஐயோ, சாமி! இன்னெக்கி எம் பாட்டி செத்துப் போச்சுதுங்க. காலணக் காசுகூடக் கையிலே இல்லேங்க?" என்று அழுவான். அவன் அரை ரூபாய் கேட்கும் போது, கால் ரூபாயாவது எவரும் கொடுத்து விடுவார்கள். பிறகு, அவன் பாட்டியும் கையுமாகப் பாட்டியைப் பார்க்கப் புறப்பட்டு விடுவான். எங்கே? கள்ளுக் கடைப் பக்கம்தான். அவனுக்கு எத்தனை பாட்டிகள்தான் இருந் தார்களோ, இன்னும் எத்தனை பாட்டிகளை அவன் நாக்கு நுனி யில் வைத்திருக்கிருனே!

இந்தச் சில்லறைக் கடன் விஷயமே இப்படித்தான். யாராரையோ சொல்வானேன்? என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். வாங்கின பணத்தைக் கொடுப்பதென்றால், மனதுக்கு மிக்க கஷ்டமா யிருக்கிறது. வாங்கின பணமாவது! அவர்கள் கொடுத்த பணம்தான் அன்றே செலவழிந்து விட்டதே; இன்று நம் கையிலுள்ள பணம், நாம் உழைத்துச் சம்பாதித்த தல்லவா? இதை எப்படிக் கொடுப்பது?

மாம்பலத்து நண்பரைப் பற்றிச் சொன்னேனே, அவர் பணம் இன்னமும் எனக்குத் திரும்பி வரவில்லை. நேற்று மறுபடியும் அவ்வரைப் பணம் கேட்கச் சென்றிருந்தேன். அவரோடு பேசிக்கொண்டே யிருக்கையில், இருவருக்கும் தெரிந்த மூன்றாவது நண்பர் ஒருவர் அங்கே வந்துகொண்டிருந்தார். அவர் தலையைக் கண்டதும், நண்பரைப் பணம் கேட்காமலே, நான் திரும்பி வந்துவிட்டேன். காரணம், வேறு ஒன்றுமில்லை. அந்த மூன்றாவது நபர் எனக்கு ஒரு முப்பது ரூபாய் கைமாற்றுக் கொடுத்து இரண்டு வருஷங்கள் தான் ஆகிறது. அதை எங்கே கேட்டு விடப்போகிறாரோ என்ற பயம்தான்.

மொத்தத்தில், இந்தச் சில்லறைக் கடனே வாங்கப்படாது; வாங்கினாலும் கொடுக்கப்படாது. என்னைக் கேட்டால், சில்லறைக் கடன் வாங்குபவனைவிட, கொடுப்பவன் பாடுதான் நிரம்பத் திண்டாட்ட மாகும்.

" 'கடன் கொண்டான் நெஞ்சம் போலும் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்று இராமாயணத்தில் இருக்கிறதே, அதில் 'கொண்டான்' என்பது இடைச் செருகலா யிருக்கும்; 'கொடுத்தான் என்பதுதான் சரி" என்றாலோ, "அந்தப் பாட்டே இடைச் செருகல்தான், ஐயா" என்று மண்டையிலே அடிக்கிறார்கள். எது எப்படி யிருந்தால் என்ன; அந்தப் புலவர் மட்டும் இந்த அற்புத நாகரிக உலகில் இருந்தால்......இருந்தால் என்ன? அவருடன் நான் சண்டைக்குப் போய்விடுவேன் என்று நினையாதீர்கள். 'இருந்தரானால், கட்டாயம் 'கடன் கொடுத்தார் நெஞ்சம் போலும் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்றுதான் அவர் பாடியிருப்பார்; அவர் பாடாவிட்டால், அவரிடம் ஓர் ஐந்து ரூபாய், நான் கடன் வாங்கியிருப்பேன். பிறகுமா, அவர் அப்படிப் பாடாமல் போய்விடுவார்?

★

## ஆள் மாற்றம்!

ஒரு நாஜி விமானத்தைச் சுட்டு வீழ்த்தி, அதிலிருந்த விமானியை, ஆங்கிலேயர் பிடித்தார்கள். காயத்தினால், ரத்த விளாறாய்ப் போய்க் கொண்டிருந்ததால், ஆஸ்பத்திரியில் சிகிச்சை செய்தார்கள். சிகிச்சை நடந்து கொண்டிருந்த போதே, அந்த நாஜி, மூர்க்கத்தனமாய் ஆங்கிலேயரை மட்டு மரியாதை யின்றித் திட்டிக் கொண்டே யிருந்தான்.

அவன் தேகத்தில் ரத்தம் குறைந்ததால், வேறொருவன் உடம்பிலிருந்து எடுத்த ரத்தத்தை அவனுடைய உடலில் பாய்ச்சி, கட்டெல்லாம் கட்டி முடித்தார்கள். அவனோ வசை பாடிய வண்ணம் இருந்தான்.

"பதறாதே, பையா! இன்னும் கொஞ்ச நேரம் தான் உனக்கு இந்த வெறி யெல்லாம் இருக்கும். பிறகு, சாந்தமாகி, நல்ல குணசாலியாகி விடுவாய். ஏனெனில், இரண்டு ஆழாக்கு யூத ரத்தம் உன் உடம்பில் ஏறியிருக்கிறது. கவலைப்படாதே" என்றார்கள் ஆங்கில டாக்டர்கள்.

Typed 11.12.91

# வெங்காய — — வியாபாரம்

'சாவி'

ஒரு காட்டில் ஒரு முயல் இருந்தது. அது ஒரு நாள் தன் வீட்டுக்கு எதிரிலிருந்த மரத்தடியில் ஒரு வெங்காயக் கடை வைத்தது. வெங்காயம் வாங்குவதற்காக, காட்டிலுள்ள மிருகங்களும் பறவைகளும் முயலின் கடையைத் தேடிவந்தன. ஒரு நரியும் முயலின் கடைக்கு வந்து, அரையணுவுக்கு வெங்காயம் வாங்கிற்று. நரி கொடுத்த காசு செல்லாக் காசாயிருந்தது. இருந்தாலும், செல்லாக் காசை வாங்கிக் கொள்ள முயல் ஆட்சேபிக்கவில்லை. ஏன் என்றால், நரியின் கையில் ஒரு கனமான தடி இருந்தது; தடியால் அடித்து விடுமோ என்று முயலுக்குப் பயம்!

மறுநாள் முயல் தன் தோட்டத்திலிருந்து நல்ல நல்ல வெங்காயங்களெல்லாம் விற்பனைக்காகக் கொண்டுவந்து பரப்பியது. வெங்காயம் பெரிதாகவும் அழகாகவும் இருந்ததால், "ஒரு வெங்காயம் அரையணுவுக்குக் குறைந்து கொடுப்பதில்லை" என்று கறார் விலை சொல்லிற்று.

மறு தினமும் நரி வெங்காய வியாபாரம் செய்வதற்காக, சட்டைப் பையில் காசுகளைக் குலுக்கிக்கொண்டே முயலிடம் வந்தது.

"இந்த வெங்காயம் என்ன விலை?" என்று பணத்திமிருடன் கேட்டது நரி.

"ஒன்று அரையணு" என்று கண்டிப்பாக விலைகூறியது முயல். நரிக்கு வெங்காயம் என்றால் பரம ஆசை. இது முயலுக்குத் தெரியும். அத்துடன் தன்னை நேற்றுச் செல்லாக்காசு கொடுத்து ஏமாற்றிய நரிக்கு ஒரு பாடம் கற்பிக்கவேண்டும் என்றும் நினைத்தது.

"சரி; 50 வெங்காயம் எண்ணிப்போடு, காசு இந்தா" என்று சொல்லி, சில வெள்ளைக் காசுகளை வீசியது நரி.

"நல்லது; உரக்க எண்ணிப் போடுகிறேன். ஐம்பது வெங்காயமா வேண்டும்?" என்று சொல்லி, முயல் கைநிறைய வெங்காயத்தை எடுத்து எண்ணிப் போட ஆரம்பித்தது.

"ஒன்று, இரண்டு, மூன்று' நாலு, ஐந்து" என்று எண்ணிவிட்டு, "ஆமாம், உங்க முதல் குழந்தைக்கு என்ன வயசு!" என்று நரியைப் பார்த்து, அக்கறையோடு விசாரித்தது முயல்.

தன் குடும்ப விவகாரங்களில் சிரத்தை காட்டும் முயலின்மீது, நரிக்குச் சந்தோஷம் உண்டா

முயலை, நரி ஏமாற்றுகிறது. முயல் மட்டும் விடுமா? அது நரியை ஏமாற்றி விடுகிறது. பலம் நமக்கு இருக்கிறது என்ற கர்வம் நரிக்கு. தந்திரக்கார முயல், பலத்துக்குப் பயப்படவில்லை. தந்திரம், பலத்தைவிடப் பெரியதல்லவா?

யிற்று. "மூத்த பிள்ளைக்கா கேட்கிறாய்? அந்தப் பயலுக்கு எழு வயசு இப்போது" என்று திருப்தியுடன் பதில் கூறியது நரி.

"எழு வயசா! சரி; இந்தாங்க எழு, எட்டு, ஒன்பது, பத்து—ஆமாம். உங்க வீட்டிலே கோழி முட்டை திருட்டுப்போய்விட்டதாகக் கேள்விப்பட்டேனே, அது நிசமா?" என்று கேட்டது முயல். அது ஆறு என்று எண்ணாமல், ஒரு வெங்காயம் எமாற்றி விட்டதை, நரி கவனிக்கவே யில்லை.

"நிசந்தான். என் வீட்டில் பதினெட்டு முட்டை களவு போய்விட்டது" என்று விசனத்துடன் கூறியது நரி.

"த்சு, த்சு; பதினெட்டா? அக்கிரமம்! பதினெட்டு முட்டை என்றால், இந்தக் காலத்தில் என்ன விலை ஆயிற்று! பதினெட்டு, பத்தொன்பது, இருபது, இருபத்தி ஒண்ணு,—உம்—உங்க வீட்டு நம்பர் என்ன என்று என்னிடம் சொல்லி விட்டுப் போங்க; நான் வெங்காயங்களைக் கட்டி, கூலிஆள் மீது வைத்து அனுப்பிவிடுகிறேன். ஓ! மறந்து போயிட்டேனே! உங்க வீட்டு நம்பர் முப்பத்திரண்டு இல்லே? சரி; சரி. முப்பத்திரண்டு, முப்பத்து மூணு, முப்பத்து நாலு—ஒரு சங்கதி கேட்டீங்களா? பக்கத்துச் சாலையிலுள்ள கரடிக்கு 40 ஜாடி தேன் வந்ததாம். என்ன அதிர்ஷ்டம் அந்தக் கரடிக்கு! நாற்பத்தி ஒண்ணு, நாற்பத்திரண்டு, நாற்பத்து மூணு. நரியாரே! என் கோழி இந்தத் தடவை சரியாக நாற்பத்தேழு முட்டைகள் இட்டது. நீங்களென்ன நினைக்கிறீங்க?" என்றது முயல்.

"நான் ஒண்ணும் நினைக்கவில்லை. நீ வெங்காயத்தை எண்ணிப் போடு."

"கோபிக்காதீங்க! — இதோ போடறேன். எதிலே விட்டேன்? ஆமாம்; நாற்பத்தேழு, நாற்பத்தெட்டு, நாற்பத்தொன்பது, ஐம்பது. சரியாப் போச்சுங்க. இதையெல்லாம் சரியாகக் கட்டிக் கீழே விழாமல் எடுத்துக்கொண்டு போங்க. போய்வாரீங்களா?"

நரியும் வெங்காயத்தை கட்டிக்கொண்டு புறப்பட்டுச் சென்றது. நரி அப்பால் சென்றதும், முயல் தன் விலாவெலும்பு வலிக்கும்படி சிரித்தது. நரி வீட்டுக்குப் போய், வெங்காயத்தை எண்ணிப் பார்த்தது. ஆனல், அதில் ஐம்பது வெங்காயம் குறைவா யிருந்தது. அது எப்படிக் குறையா திருக்கும்? முயல்தான் எமாற்றித் தந்திரம் செய்து விட்டதே!





# ஏரோப்ளேன்

என்னிடம் ஏரோப்ளேன் இருந்தால்,
எவரும் வியக்கப் பறந்திடுவேன்.
கண்ணைப் பறிக்கும் காடுமலை
கடுகித் தாவிக் கடந்திடுவேன்.

நீல வானம்தனில் ஏறி
நெடிய கடலைத் தாண்டிடுவேன்.
கோல வில்அணி மேகங்கள்
கூட்ட மதனுள் புகுந்திடுவேன்.

தேச தேசம் பார்த்திடுவேன்.
திரிந்து சுழன்று விரைந்திடுவேன்.
வீசும் கதிர்களின் அமுதமதை
விரும்பி மேனிக் கூட்டிடுவேன்.

எத்தனை தூரம் பறந்தாலும்
என்னூர் ஓட்டலை மறவாமல்
தித்திப்போடு மாலை டிபன்
திரும்பி வந்து தின்றிடுவேன்.

வழியில் காணும் என் பள்ளி;
வம்புக்காக அதன் மேலே
குழியும் பறியாச் சிறுகுண்டைக்
'குபீல், டமீர்' என வீசிடுவேன்.

—'தஞ்சன்'

★

புத்தக  உலகம்

**கூட்டுக்கு வெளியே :** ஆசிரியர் : வி. ஸ. காண்டேகர். மராத்தியிலிருந்து மொழி பெயர்த்தவர் : கா. ஸ்ரீ. ஸ்ரீ. வெளியிட்டோர் : கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர். விலை ரூ. 1—4—0.

புதுமையும் கலைச் சுவையும் நிறைந்த நவயுக எழுத்தாளர் ஸ்ரீ காண்டேகர். அவருடைய ஏழு சிறு கதைகள் இந்தப் புத்தகத்தில் தமிழ்ப் படுத்தித் தரப்பட்டிருக்கின்றன. கதை என்பதைவிட வாழ்க்கையின் மனோ தத்துவ சித்திரங்கள் என்று இவைகளைச் சொல்வதே மிகவும் பொருத்தமாகும். நேருக்கு நேரே இன்று வாழ்க்கையில் எதிர்ப்படும் பற்பல சிக்கல்களையும், உணர்ச்சியைக் கிளரும் விதம், ஜீவன் நிறைந்த கதா பாத்திரங்களின் மூலம், சித்திரங்களாய்த் தீட்டியிருக்கிறார் ஆசிரியர். முதல் கதையில், 'கூட்டு'க்கு வெளியே சென்ற காளிந்தி எப்படி அதுவரை அறியாத உலகக் காட்சிகளைக் கண்டாளோ அப்படியே, வாசகர் அனைவருமே வெளி உலகத்தை அறியும்படி, இந்தக் கதைகள் கண் திறப்பவையாகும். அனுபவ ஞானக் களஞ்சியமான அருங் கருத்துக்களும் மேலான லட்சியமும் ஒவ்வொரு கதையிலும் நிரவிக் கிடக்கின்றன. மொழி பெயர்ப்பும் நேர்த்தியாயிருக்கிறது.

**தமிழ்ப் பெரியார்கள் :** ஆசிரியர் : வ. ரா. வெளியிட்டோர் : தமிழ்ப் பண்ணை, தியாகராய நகர், சென்னை. விலை ரூ. 2—8—0.

மனிதர்களைப் பற்றிய குணாதிசய சித்திரங்களை எழுதுவது, ஓர் அபூர்வக் கலையாகும். அதில் தலை சிறந்து விளங்குகிறார் வ. ரா. ஆங்கிலத்தில் எ. ஜி. ஜி. இந்தக் கலையில் வல்லவர். சில அம்சங்களில் அவரையும் இவர் மிஞ்சியிருக்கிறார். ராஜாஜி, ஈ. வே. ரா., திரு. வி. க., வே. ராமலிங்கம் முதலிய பனிரண்டு பேர்களின் குண சித்திரங்கள் இந்தப் புத்தகத்தில் அடங்கியிருக்கின்றன. ஜன சமூகத்தை, தங்கள் வாழ்க்கையின் மூலம் கலக்கி விடுபவர்கள்தான் பெரியார்கள் என்ற கொள்கையை உரை கல்லாகக்கொண்டு, இந்தப் பன்னிருவரையும் வ. ரா. பொறுக்கி யிருக்கிறார். குணங்களைப் புகழ்கையில், கருமித்தனம் காட்டாமல் அவர் புகழ்கிறார். குறைகளையும் தாட்சண்யமின்றிக் குறிப்பிடுகிறார் ; எனினும், வெகு நயமாகவே குறிப்பிடுகிறார். மளிகைக் கடையில் பிடிக்கும் துலாக்கோல் எல்லார் கையிலும் ஒரே நிறை காட்டக்கூடும். மனத் துலாக்கோல், ஒவ்வொருவரிடமும் வெவ்வேறு தடைக் கல்லைக் கொண்டிருக்கிறது. ஆகையால், வ. ரா. வின் நிறை மதிப்புக்களை, எல்லாரும் பரிபூர்ணமாய் ஒப்புக் கொள்ள முடியாமல் இருக்கலாம். ஆனால், அவர் அற்புதமா எழுதியிருப்பதை மட்டில் நாணயமான எவரும் மறுக்க முடியாது.

**எதிர்கால உலகம் :** ஆசிரியர் : கு. ப. ராஜகோபாலன். வெளியிட்டோர் : நவயுகப் பிரசுராலயம். காரைக்குடி. விலை ரூ. 1—12—0.

இன்று உலகம் சீரழிந்து கிடக்கிறது. இந்த நிலைமாறி, உலகத்தில் சமாதானமும் சமத்துவமும் நிலவ என்ன வழி? இந்த வழியைக் காண, பற்பல பெரியார்கள், பற்பல முறைகளைக் கோலுகிறார்கள். அவர்களில் வெல்ஸ், தாகூர், நேரு, ஷா, காந்தி, அரவிந்தர் ஆகிய ஆறு பேரை எடுத்துக் கொண்டு, அவர்களின் கொள்கைகளையும் கருத்துக்களையும், இந்நூலாசிரியர் ஆராய்ந்து விளக்கியிருக்கிறார். வெல்ஸ், உலக சமஷ்டித் திட்டத்தை வகுக்கிறார் ; ஆனால், அவருக்குப் பாரமார்த்திகத்திலே நம்பிக்கை கிடையாது. ஷா, நவநாகரிகம் தொலைந்து மனிதனின் மனோபாவம் மாறவேண்டுமென்கிறார். எளிய வாழ்வை மேற்

கொண்டு, சத்தியத்தையும் அகிம்சையையும் கடைப்பிடிக்க வேண்டும் என்கிறார் காந்திஜி. அஹிம்சையோடு கூடிய அபேதவாதத்தில் நம்பிக்கை கொண்டவர் ஜவஹர். உலகின் கலைகளெல்லாம் திரண்டு பரிணமித்து வளர்ந்த புது நிலையொன்றே உலகை ஒன்று படுத்தும் என்று தாகூர் எண்ணுகிறார். நரனை அமரனுக்கும் அத்யாத்ம வித்தையைப் போதிப்பவர் அரவிந்தர். இந்த ஆறு பேர் சொல்லும் மார்க்கங்களையும் அழகுபட எடுத்துக் கூறுகிறார் ஆசிரியர்.

**காந்தியும் விவேகானந்தரும்:** ஆசிரியர்: வெ. சாமிநாத சர்மா. வெளியிட்டோர்: சக்தி காரியாலயம், ஜி. டி., சென்னை. விலை ரூ. 1—8—0.

'யாரொருவருடைய இதயம் ஏழைகளுக்காக ரத்தம் வடிக்கிறதோ அவரே மகாத்மா' என்று விவேகானந்தர் கூறும் லட்சணப்படி யிருப்பவர் காந்தி. 'எவ்விதப் பற்றுமின்றி, செயலைக் கடமையாய்ச் செய்பவனே துறவி' என்று காந்தி கூறும் லட்சணம் வாய்ந்தவர் விவேகானந்தர். இந்தத் துறவி, அந்த மகாத்மா இருவரின் வாழ்க்கைச் சிறப்புகளையும் இருவரும் தேசத்துக்குச் செய்துள்ள சேவைகளையும் சுருக்கமாய் அழகிய முறையில் ஆராய்ந்திருக்கிறார் சர்மாஜி.

**ருஷ்யக் கதைகள்:** மொழிபெயர்ப்பு. ஆசிரியர்: எம். எல். சபரிராஜன். வெளியிட்டோர்: சக்தி காரியாலயம், ஜி. டி., சென்னை. விலை ரூ. 4—0—0.

பதினேழு அரிய ருஷியக் கதைகள் இதில் அடங்கியிருக்கின்றன. ருஷிய நவீன நாவலின் தந்தை என்று புகழ் பெற்ற புஷ்கின் தொடங்கி, செக்காவ், டால்ஸ்டாய், ஷோலகோவ், கொகோல், டாஸ்டாவ்ஸ்கீ, டர்ஜனீவ், ஜீவிய ஆசிரியர் கார்க்கி வரையில் பல்வேறு தலை சிறந்த ஆசிரியர்களால் எழுதப்பட்டவை இவை. வாழ்க்கையின் பலவிதத் தத்துவங்களையும் உணர்ச்சிகளையும் சக்திகளையும் இவை சித்தரிக்கின்றன. இனிய தெளிவான நடையில், தமிழாகப் பட்டிருக்கின்றன.

**யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்:** ஆசிரியர்: நாரண - துரைக்கண்ணன். வெளியிட்டோர்: ஆனந்த போதினி காரியாலயம், சௌகார்ப்பேட்டை, சென்னை. விலை ரூ. 1—0—0.

விதவையின் துயரத்தைப் பற்றிய, ஒரு கதை. காமாட்சி விதவையாகிறாள். ஆத்ம நாதனைக் காதலிக்கிறாள். அதற்குத் தந்தையும் உறவினருமே இடையூறு. பின்னால், காதலனையே சந்தேகிக்கிறாள். கண்டவரையெல்லாம் மயக்க எண்ணிக் கருத்தழிகிறாள். கடைசியில், துயர் தாங்காமல், கடலில் மூழ்கி இறக்க முயல்கிறாள். காதலனையும் சந்திக்கிறாள். நடுவிலெல்லாம் ஒரே சோகமாயிருந்தாலும், முடிவு மங்களமாகவேயிருக்கிறது. நடை தெளிந்து, செந்தமிழ் மணம் கமழ்கிறது.

**தமிழர் (திராவிடர்) மதச் சுருக்கம்:** ஆசிரியர்: தி. அர. நடேசப் பிள்ளை. கிடைக்குமிடம்: பழனியப்பா பிரதர்ஸ், புத்தக வியாபாரம், திருச்சிராப்பள்ளி. விலை ரூ. 1—12—0.

நூலின் முகவுரையைப் பார்த்தால், 15,000 வருஷங்களுக்கு முன்பே தமிழ் நாட்டில் இருந்த ஏதோ ஒரு தூய தமிழர் சமயத்தைக் கடைந்தெடுத்து, ஆசிரியர் நமக்குத் தரப்போகிறார் என்று தோன்றுகிறது. உள்ளே பார்த்தால், கதம்பமான பல பொருள்கள் காணப்படுகின்றன. விபூதி, ஆலயம், விநாயகர், நடராஜர், விஷ்ணு, காளி, பாரதம், தசாவதாரம், திருவரங்கம், சிதம்பரம் இப்படி என்னென்னவோ விஷயங்கள் பற்றித் தாம் கேட்டதும் படித்ததும் யுக்தி செய்ததுமான ஏராளமான சங்கதிகளை, ஆசிரியர் இந்தப் புத்தகத்தில் கொட்டி நிறைத் திருக்கிறார். 46 பெரிய அயிட்டங்கள். அத்தனையும் போதாமல், முப்பது பக்கங்களுக்கு மேல் பல துணுக்குகளையும் வரைந்து தள்ளியிருக்கிறார்.

★

## அறிவிப்பு

இலங்கையில் 'சக்தி' (மாத வெளியீடு) விற்பனை செய்வதற்கு நாளிது டிசம்பர் மாதம் முதல் பூபதி நிலயத்தார் (BOOPATHI NILAYAM, 224, GRANDPASS, P. O., COLOMBO.) சோல் ஏஜண்டாக நியமனம் செய்யப் பெற்றிருக்கிறார்கள்.

1—11—43 }
சென்னை } சக்தி காரியாலயம்

# அறிவிப்பு

இப்பொழுது சிலர் புதிய கம்பெனிகள் ஏற்படுத்தி அதை T. S. R. & Co.வின் பிராஞ்சு என்றே அல்லது T. S. R. & Co.வில் சேர்ந்தவர்களால் நடத்தப்படுவதாகவோ சொல்லியும் எங்கள் ஆலிலைக் கிருஷ்ணன் டிரேட் மார்க்கைப் போல ஒன்றைப் போட்டுக்கொண்டு, எங்கள் சாமான்களைப் போல் தயாரித்து பொது ஜனங்களை ஏமாற்றி வருவதாய் அறிகிறோம்.

ஆகவே ஷை. போலி கம்பெனிகளுக்கும் T. S. R. & Co.விற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்வதோடு எங்கள் வாடிக்கைக் காரர்களும், வியாபாரிகளும், பொதுஜனங்களும் தயவு செய்து எங்கள் ஸாமான்களை வாங்கு முன் **T. S. R. & Co., Kumbakonam** என்ற விலாசத்தையும் இதில் உள்ளபடி எங்கள் ஆலிலைக் கிருஷ்ணன் டிரேட் மார்க்கு சரியாக இருக்கிறதா என்பதையும் பார்த்து வாங்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.






மதராஸ் ஏஜண்டு:

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

**திருவல்லிக்கேணி**

**மதராஸ்**

**T. S. இராஜகோபாலய்யங்கார்**

சொந்தக்காரர்:

**டி. எஸ். ஆர். & Co.**

**கும்பகோணம்**